பேராசிரியர் முனைவர்

ந சுப்பு ரெட்டியார்

# கம்பனில் மக்கள் குரல்

எளிமை, இனிமை, தெளிவு இவர்தம் நூல்களின் தனிச்சிறப்புகளாகும்.








1916 2016

ந சுப்பு ரெட்டியார் 100

*Centenary Committee Publication*



# கம்பனில் மக்கள் குரல்

பேராசிரியர் முனைவர் ந சுப்பு ரெட்டியார்



எளிய வேளாண் குடியில் பிறந்து, தன் முயற்சியால் பயின்று,
ஆசிரியராக தொடங்கிப் பேராசிரியர் வரை உயர்ந்தவர்.
திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறையை
உருவாக்கி அதன் தலைவராகப் பணியாற்றியவர்.
பல பல்கலைக்கழகங்களில்
சிறப்புநிலைப் பேராசிரியராகத் திகழ்ந்தவர்.

பண்டையத் தமிழ்க்கல்வி மரபில் வேரூன்றி,
நவீனக் கல்விப் பயிற்றல் முறைகளில் தேர்ந்தவர்.
பல ஆய்வாளர்களை உருவாக்கியவர்.
வாழ்நாள் முழுவதும் எழுத்தும், பேச்சுமாக வாழ்ந்தவர்.
136 [135 +1] நூல்களைப் படைத்துப் பன்முக ஆளுமையாக மிளிர்ந்தவர்.

அன்னாரின் நூற்றாண்டு (2015~2016)
108 நிகழ்வுகளாக தமிழகமெங்கும்
மிகச் சிறப்பாக கொண்டாடப் பெற்றது.

இந்நூலில் உள்ள 11 கட்டுரைகளின் மூலமாக, கம்பன் காலத்து
குடியாட்சி, அசுரர்கள் வதம், இளையபெருமாள், குறிஞ்சி
நிலக்காட்சிகள், அநுமனின் திறன், காடுறை வாழ்க்கை,
இராகவன் புகழ், தம்பியுடையான் பகையஞ்சான்,
இன்ன பிற காட்சிகளையும் திறனாய்வு முறையில்
கம்பனை நுகர இயலுகிறது.

ந சுப்பு ரெட்டியார் 100
Centenary Committee Publications

ISBN: 978-81-939430-1-4

eBOOK ~ மின் நூல்



# கம்பனில் மக்கள் குரல்

அருங்கலைக்கோன், சடகோபன் பொன்னடி, சேவா ரத்னா,
தமிழ்ப்பேரவைச் செம்மல், கலைமாமணி, ஆய்வுத்தமிழரசு,
பொதுமறைச் செம்மல், வைணவ இலக்கிய மாமணி

பேராசிரியர் முனைவர்

**ந சுப்பு ரெட்டியார்**

**முன்னாள் வாழ்நாள் மதிப்பியல் பேராசிரியர்**

தமிழ் இலக்கியத்துறை
சென்னைப் பல்கலைக்கழகம்





1916 2016

**ந சுப்பு ரெட்டியார் 100**

*Centenary Committee Publications*

# கம்பனில் மக்கள் குரல்



முதற்பதிப்பு – 1983
இரண்டாம் பதிப்பு - 2018

**Price: Rs.240.oo**

Published by:
**ந சுப்பு ரெட்டியார் 100**
*Centenary Committee Publications*
**AD-13, 5th Street, Anna Nagar West, Chennai – 600 040**


ISBN 978-81-939430-1-4

Wrapper design: **Centenary Committee**
Printed at: DJ Prints, Chennai – 600 095

திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக் கழகத்தில் பல்லாண்டுகள் வடமொழித் துறையில் துணைப்பேராசிரியராகப் பணியாற்றி ஓய்வு பெற்ற பிறகு தற்சமயம் புதுச்சேரி ஃபிரெஞ்சு ஆய்வுக் கழகத்தில், ஆய்வு நெறியாளராகப் பணியாற்றும்

**டாக்டர் வி. வரதாசாரியார் அவர்கட்கு**

# அன்புப் படையல்

பைந்துழாய் மௌலிப் பரமனை யுளத்திற்
பதித்தவர்; உபயவே தாந்தம்
சந்ததம் பயிலும் நாவினர்; குன்றுத்
தகுதியை அடக்கமாம் மெருகிட்
டந்தமில் பொலிவைப் பெறுபவர்; எனக்கும்
ஆய்நெறி காட்டிய ஞான
சுந்தரர் வரதா சாரியர் பாதச்
சுடரினில் மலர்கஇந் நூலே.

# அணிந்துரை

நீதிபதி சு. இரத்தினவேல் பாண்டியன்,
சென்னை உயர் நீதிமன்றம்

"விருத்த மெனும் ஒண்பாவிற்கு உயிர் கம்பன்" என்று புலவர்களால் போற்றப்பெறும் கம்பன் மக்கள் கவிஞன். மக்களின் மன எழுச்சிகளையும் அவர்களின் சுவையறிபாங்கையும் நன்கு அறிந்தவன். ஆகையால் 'நடையினின்றுயர் நாயகன்' கதையை 'ஈரத்தமிழில்' நாடறியச் செய்தனன். அவனியில் அவதார மூர்த்தியாக நடையாடின இராம பிரானை மக்கள் மனத்தில் எழுந்தருளச் செய்தான்; தமிழகத்தில் பக்தி இயக்கத்திற்குப் பின்னர் எழுந்த காவியமாதலால் ஆழ்வார் பாசுரங்களின் தாக்கம் காவியத்தின் சிறப்பைப் பன்மடங்கு உயர்த்தி விடுகின்றது. கடந்த ஐம்பதாண்டு முன்னர் வரையிலும் இக்காவியம் புலவர்களால் மட்டிலும் போற்றப்பெற்று வந்தது. கடந்த அரை நூற்றுண்டுக் காலமாகக் காரைக்குடி 'கம்பன் அடிப்பொடி' அமரர் சா. கணேசன் அவர்களின் அரிய முயற்சியால் கம்பன் பொது மக்களுக்கு நன்கு அறிமுகமானுன். ஆனந்த விகடனில் பி. ஸ்ரீ. அவர்கள் எழுதி வந்த 'கம்ப சித்திரம்' பற்றிய கட்டுரைகளும் ரசிகமணி டி. கே. சி. அவர்களின் காவியம்பற்றிய பேச்சும், எழுத்தும், அவர்தம் கம்பராமாயணப் பதிப்பும் பொதுமக்களின் ஆர்வத்தை மேலும் வளர்த்தன. அண்மைக் காலத்தில் மாவட்டந்தோறும் கம்பன் கழகங்கள் தோன்றுவதற்கு முதற்காரணமானவர் முன்னுள் தமிழகத் தலைமை நீதிபதி திரு. மு. மு. இஸ்மாயில் அவர்கள். இக் கழகங்கள் கம்பன் காவியத்தைப் பொது மக்கள் நுகரும் திருப்பணியை நிறைவேற்றி வருகின்றன. கற்றோரும் மற்றோரும் காவியத்தை அநுபவித்து மகிழ்கின்றனர்.

பேராசிரியர் டாக்டர் ந. சுப்புரெட்டியார் இங்ஙனம் கம்பனை ஆழ்ந்து கற்றோருள் ஒருவர். பல்லாண்டுகளாகப்

பல்வேறு சந்தர்ப்பங்களில் இவர் எழுதிய பதினொரு கட்டுரைகளின் தொகுப்பே இந்நூல். பேராசிரியர் பல கோணங்களில் கம்பனைத் துய்த்தமையைக் கட்டுரைகள் பிரதிபலிக்கின்றன. 'கம்பனில் மக்கள் குரல்' என்ற முதற் கட்டுரையில் புறநானூற்றுக் காலம் முதல் நடைபெற்று வந்த 'கோனாட்சி' முறை மாறிக் கம்பன் காலத்தில் (பத்தாம் நூற்றாண்டு) 'குடியாட்சி' முறைக்கு வித்திட்ட நயத்தைக் காட்டுகின்றார். மக்களுக்கு உயிராக இருந்த அரசன் அவர்கட்கு உடலாகின்றான். 'மன்னுயிர் உய்யத் தாங்கும் உடலன்ன மன்னவன்' என்றாகின்றான் (பக். 2). இக்கட்டுரையில் பேராசிரியர் நான்கு அரசுகளைக் காட்டுவதும், மக்கள் அந்த அரசுகளைப்பற்றித் திறனாய் வதும் நம்மைச் சிந்திக்க வைக்கின்றன. 'காவியத் தம்பி' என்ற கட்டுரை இளையபெருமாளைப் பற்றியது; 'தம்பி யுடையான் பகையஞ்சான்' என்ற உண்மையைப் பறை சாற்றுகின்றது (பக். 32). 'அறங்கடந்தவர் செயல்' என்ற கட்டுரை 'ஆணவத்தின்' திருவிளையாடல்கள் ஒரு நாள் அடங்கியே தீரும் என்ற உண்மையை எடுத்துக் காட்டுவ தாக அமைகின்றது, 'கம்பனில் குழந்தை இன்பம்' என்ற கட்டுரை கம்பன் குழந்தையின்பத்தைப் பற்றி ஏன் பாட வில்லை, சரியான சந்தர்ப்பம் இருந்தும் பாடாது விட்டது ஏன்? என்ற வினாவை எழுப்பி அதற்கு விடையும் தரும் பாங்கு நம் சிந்தனைக்கு விருந்தாகின்றது.

'மலைக்'காட்சி' (ஆறாவது கட்டுரை) குறிஞ்சி நிலக் காட்சிகளை அற்புதமாகச் சித்திரித்துக் காட்டுகின்றது. இங்குக் கம்பனின் 'தெய்மாக் கவியின் மாட்சி'யைக் காண முடிகின்றது. இஃது தான் இராமன் திருமணத்திற்குப் பின்னர் காடுறை வாழ்க்கையின் தொடக்கத்தில் நுகர்ந்த தேனிலவுப் (Honey moon) பகுதி! அதன் பிறகு இராமன் பல் வேறு துன்பங்கட்கு ஆளாகின்றான் என்பதை நாம் அறிவோம். 'விளையும் பயிர்' என்ற கட்டுரை மேகநாதனின் திறமையை மேம்பட எடுத்துரைக்கின்றது, 'சிறை வைத்த

காதல்' என்ற கட்டுரையில் சீதையின் உருவத்தை இராவணன் சிறையில் வைத்ததையும் (ஆரணி, மாரீசன் வதை—83), பல நூறு பாடல்கட்குப் பின்னர் அந்த உருவம் சிறைவீடு பெற்றதையும் (யுத்த இராவணன் வதை-239) காட்டும் பாங்கு பேராசிரியரின் நுண்மாண் நுழை புலத்தை நுட்பமாகக் காட்டுகின்றது.

'கவி நாயகன்' (9-வதுகட்டுரை) என்பதில் 'கவிநாயகன்' என்ற தொடர் கம்பனையும் அநுமனையும் சுட்டுவதை (பக்-108) எடுத்துக் காட்டி, "இராகவன் புகழினைச் செவிக் குத் தேனுக இனிக்கும் வண்ணம் திருத்திய பெருமையை இரு கவிநாயகர்களிடத்திலும் கண்டுகளிக்கலாம். வான் மீகத்திலுள்ள வரலாறுகளில் சிலவற்றைத் திருத்தித் தமிழர்களின் மரபுக்கும் நாகரிகத்திற்கும் ஏற்றவாறு இராமகாதையை அமைத்த பெருமை கவிநாயகனுகிய கம்பனுக்கு உரியது. இராமனது காடுறை வாழ்க்கையின் வரலாற்றில் நேர்ந்த சில பேராபத்துகளை நீக்கி அதனைச் செம்மையாக மாண்புறுத்திய பெருமை கவி நாயகராகிய வாயுபுத்திரனைச் சாரும்" (பக்-97) என்று சுட்டியுரைத்து இராமனது வரலாற்றில் எழுந்த கோணல் கள் எவை என்பதையும், அவற்றை நிமிர்த்தின அநுமனின் திறத்தினையும்' விளக்கும் பாங்கு அற்புதமாக அமைந் துள்ளது.

'கம்பன் காட்டும் மேழிச் செல்வம்' என்ற கட்டுரையில், இக்காலத்திற்கும் பொருந்துகின்ற தன்மையைக் காண்கின் ருேம். 'உணவு பற்ருக்குறை' பற்றிய காரணங்களைச் சுட்டியுரைத்து "வன மகோத்ஸவம்', 'ஏர்முனைவிழா' போன்ற விழாக்களைக் கொண்டாடுவதால் யாதொரு பயனும் விளையப் போவதில்லை.வாணிகத்திற்கும் பொருத்த மான விளம்பரத் திட்டங்களை உணவுப் பெருக்கத்திற்காக அரசினர் மேற்கொள்வது வருத்தத்தை விளைவிக்கின்றது" என்ற புரட்சிகரமான கருத்து ஆழ்ந்து சிந்திக்கதக்கது. (பக், 105). "(ஏரெழுபது) கம்பனுடையதா? அல்லது பிற்

காலத்துப் புலவர் ஒருவர் இயற்றினதாக அவன் பெயரில் உலவவிட்டாரா?'' (பக், 107) என்ற ஆராய்ச்சியில் இறங்காமல் கம்பன் மேழிச்செல்வத்தைப் பாராட்டுவதை மட்டிலும் விளக்குகின்றது. 'கம்பனில் உருக்காட்சிகள்' என்ற இறுதிக் கட்டுரை ஆங்கிலத் திறனாய்வு முறையில் கம்பனை நுகர்வதற்கு வழியமைத்துக் காட்டுகின்றது.

பேராசிரியர் **டாக்டர் ரெட்டியார்** பல்துறை அறிஞர். பல துறைகளையும் சிறப்பாக அறிவியல் துறைகளை முறையாகப் பயின்று அவற்றில் ஆழ்ந்த புலமையைஅடைந்தவர். சிறந்த சிந்தனையாளர். பல் வேறு துறைகளில் படைப்பிலக்கியங்களை வழங்கி தமிழன்னையைப் பெருமிதத்துடன் களிக்கச்செய்து வருகின்றவர். இவரை **'நடமாடும் கலைக் களஞ்சியம்'** என்று கூறினாலும் அக்கூற்று மிகைபடக் கூறியதாகாது. அறிவியல்முறையில் (Scientific **Method**) பயிற்சி பெற்ற அறிஞரின் நோக்கும் போக்கும் ஆழமாகவே இருக்கும் என்ற உண்மைக்கு இப்பேராசிரியர் ஓர் எடுத்துக் காட்டாகவே அமைகின்றார். பார்ப்பதற்கும், பழகுவதற்கும் இனியவர்; படைப்புகளையும் இனிமையாக வழங்குகின்றார். நல்ல உடல் நலத்துடனும் மனவளத்துடனும் திகழும் இத்தகைய 60 ஆண்டுகட்கு மேல் பழுத்த **'இளைஞர் களின்'**சேவை நாட்டுக்குத் தேவை. இத்தகைய பெரியோர்களை ஒல்லும் வகையெல்லாம் மொழி வளர்ச்சிக்கும் பயன் படுத்திக் கொள்வது அரசின் கடமை. 56 நூல்களைப் படைத்த பேராசிரியர் டாக்டர் ரெட்டியார் பல்லாண்டுகள் வாழ்க! வளர்க அவர்தம் தமிழ்ப் பணி!!' என்று வாழ்த்துகின்றேன்.

அண்ணாநகர்
10-5-83

**சு. இரத்தினவேல் பாண்டியன்**

# நூல் முகம்

வில்லால் இலங்கை மலங்க சரம்துரந்த
வல்லாளன் பின்போன நெஞ்சம் வரும்அளவும்
எல்லோரும் என்தன்னை ஏசிலும் பேசிடினும்
புல்லாணி எம்பெருமான் பொய்கேட்டு இருந்தேனே.[1]

—திருமங்கையாழ்வார்

உள்ளம் மகிழ உரைநா அமுதூறக்
கொள்ளும் இருகாதும் குளிரவே—தெள்ளரிய
செந்தமிழ்க் கம்பத் திருநாடன்செய் நூலுக்கு
எந்தநூ லாகும் இணை[2]

என்று கவிமணி தேசியவிநாயகம் பிள்ளை சிறப்பித்துக் கம்பனைப் பல்லாண்டுகளாக அநுபவித்து வருகின்றேன். காரைக்குடிக் கம்பன்அடிப்பொடியுடன் தோழமை கொண்டு காரைக்குடியில் வாழ்ந்த பொழுது (1950-1960) கம்பனில் ஆழங்கால்பட்ட நிலையில் 'குமரி மலர்' 'ஜனநாயகம்' 'தினமணிக் கதிர்' 'தமிழ் நாடு ஞாயிறு மலர்' போன்ற இதழ்களில் பல கட்டுரைகள் வெளிவந்தன. சிலவற்றைத் தொகுத்துக் 'கம்பன் படைத்த சிறு பாத்திரங்கள்' என்ற தலைப்பில் நூலாக வெளிவரச் செய்தேன்[3]. வேறு தனி நூல்களில் சேர்ந்தவை போக எஞ்சிய பதினொரு கட்டுரைகள் இந்நூலில் இடம் பெற்று இப்போது வெளி வருகின்றன. சற்றேறக்குறைய ஏழாண்டுகளாக உறங்கிக் கிடந்து இப்போது,

---

1 பெரி—திரு. 9. 4. 5

2. மலரும் மாலையும்—கம்பர்—17

3 நாவலர் புத்தக நிலையம், 59, மேலாவணி மூலவீதி மதுரை—625 001. (1979)

மாரி கலைமுழைஞ்சில் மன்னிக் கிடந்துறங்கும்
சீரிய சிங்கம் அறிவுற்றுத் தீவிழித்து
வேரி மயிர்பொங்க எப்பாடும் பேர்ந்துதறி
மூரி நிமிர்ந்து முழங்கிப் புறப்பட்டுப்
போதருமா போலே[4]

வெளிவருகின்றது- 25 ஆண்டுகட்கு முன்னர் இவற்றைச் சுவைத்த அன்பர்களைப் போலவே இப்போதுள்ள பெரு மக்களும் சுவைத்து அநுபவித்தால் அதுவே நான் பெற்ற பேறு.

இந்த நூலை அன்புடன் ஏற்று வெளியிட்ட அன்பர் "சிவகாசி மத்தாப்புபோல், ஒருசிரிப்பு வெளிச்சம் சிதறிக்" காட்டும் வானதி திருநாவுக்கரசு அவர்கள். எத்தனையோ தரமான நூல்களைத் தந்து வாசகர்களின் அறிவுவிடாயைத் தீர்த்து வைக்கும் 'வானதி'யுடன் இந்த நூலும் சேர்ந்து கொண்டது இந்நூல் பெற்ற பேறு. இதனை வெளியிட்ட அன்பர் 'அப்பருக்கு' என் இதயம் கலந்த நன்றி என்றும் உரியது.

மிக விரைவாக, ஆனால் மிக அழகாக, அச்சிட்டு உதவிக் கற்போர் கைகளில் கவினுடன் திகழச் செய்த தமிழ் பற்றுளர் மூவேந்தர் அச்சகம் முத்து அவர்கட்கும் பிறருக்கும் என் அன்பு கலந்த நன்றியைப் புலப்படுத்திக் கொள்ளு கின்றேன்.

அண்மைக் காலமாக என் நூல்களெல்லாம் சென்னை உயர்நீதி மன்ற நீதிபதிகளின் அணிந்துரையுடன் வெளிவருகின்றன. இந்த நூலும் அம்மரபினில் வழு வாது வெளிவருகின்றது. ஜஸ்டிஸ் சு. இரத்தினவேலு பாண்டியன் அவர்கள் தமிழ் உலகுக்குப் புதியவர் அல்லர். 'எங்கள் திருநெல்வேலி' என்று மாவட்டப் பற்றுடன் பேசப்பெறும் திருநெல்வேலிச் சீமையிலுள்ள திருப்

4. திருப்பாவை—23

புடைய மருதூரைச் சேர்ந்த இப்பெருமகனார் நெல்லை இந்து கல்லூரி, பாளையங்கோட்டை புனித சேவியர் கல்லூரி, சென்னை சட்டக் கல்லூரி ஆகியவற்றில் நற் கல்வி பயின்று சென்னையிலும் நெல்லையிலும் வழக்குரைஞராகப் பணி யாற்றிப் பெரும் புகழ் பெற்றவர். இப்போது ஐம்பத்து நான்கு அகவை நிறைந்த இந்த இளைஞர் 1971-இல் பப்ளிக் பிராசிகுயூட்டராக நியமனம் பெற்று மூன்றாண்டுகள் சிறப்புடன் பணியாற்றியவர். சட்ட நுட்பங்களையெல்லாம் ஆழ்ந்து காணும் இவரது திறனைக் கண்டு தமிழக அரசு இவருக்கு நீதிபதிப் பதவியை அளித்துச் சிறப்பித்தது. 'சமன் செய்து சீர் தூக்கும் கோல்போல்' பணியாற்றிவரும் சிறப்பை இவர் தம் 'தீர்ப்புகளை'க்காணும் அன்பர்கள் அவற் றின் திட்பத்தையும் நுட்பத்தையும் உணர்வார்கள். இத்தனைக்கும் மேலாக இவர்தம் சீலமும் எளிமையும் இன்முகத்துடன் அன்பர்களை ஏற்கும் பண்பும் எவரையும் கவரும் பான்மையவை. இத்தகைய பேரன்பர் இந்நூலுக்கு மனமுவந்து அணிந்துரை அருளியது இந்நூல் பெற்ற பேறு. இவருக்கு என் இதயம் கனிந்த நன்றியைப் புலப் படுத்திக் கொள்ளுகின்றேன்.

அன்பாலும் பண்பாலும் ஆழ்புலமையாலும் இத்தனைக் கும் மேலாகத் தம் அடக்கத்தாலும் சீலத்தாலும் என் உள்ளத்தைக் கவர்ந்தவர் பேராசிரியர் டாக்டர் வி. வரதாசாரியார் பல்லாண்டுகள் திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக் கழகத்தில் வடமொழித் துணைப்பேராசிரியர் (Reader) பதவியிலிருந்து ஓய்வு பெற்றுத் தற்சமயம் புதுச் சேரி ஃபிரெஞ்சு ஆய்வுக்கழகத்தில் ஆய்வு நெறியாளராகப் பணியாற்றி வருபவர். நான் திருப்பதியிலிருந்த காலத்தில் என் பிஎச்.டி. ஆய்வுக்கு வழிகாட்டியாக இருந்தபோதும், அதற்குப் பின்னரும் இவருடன் நெருங்கிப் பழகும் பேறு பெற்றேன். வடமொழி இலக்கியத்தின் நயத்தையும் சிறப் பையும் எனக்கு எளிமையாக எடுத்துக் காட்டி அதன்பால் பற்றினை உண்டாக்கி வளர்த்தவர். மாலவனையும் மாறனை

யும் மனத்தில் இருத்திக் கொண்டதனுல் வாழ்விலும் தாழ்விலும் நெருக்கடி நிலையிலும் சலனமற்ற உள்ளத்தைக் கொண்ட இப்பெருமகனுருக்கு இந்நூலே அன்புப் படையலாக்கி மகிழ்கின்றேன். இவர்தம் ஆசியால் இவர்தம் எல்லா நற்குணங்களும் புலமையும் சமயப் பற்றும் இறையன்பும் என்னை வந்தடையும் என்பது என் அதிராத நம்பிக்கை.

என்னுள்ளே எனக்குத் தோன்ருத் துணையாக இருந்து கொண்டு என் இதயத்தேரை இயக்கி நன்னெறிப் படுத்தி வருபவன் 'பைந்தமிழ்ப் பின் சென்ற பச்சைப் பசுங்கொண்டலாகிய' ஏழுமலே அப்பன். அவனே எனக்கு இன்றுவரை உடல் நலத்தையும் மன வளத்தையும் நல்கி வருபவன். என் 'பிராரப்தம்' தீரும்வரையில் இப்படியே என்னை வைத்திருந்து இலக்கியப் பணி, சமயப்பணி, மெய்விளக்கப் பணி, அறிவியல் பணி ஆகியவற்றில் ஈடுபடச் செய்து நாட்டிற்கும் சமூகத்திற்கும் பயன்பட வைப்பான் என்ற நம்பிக்கை என்றும் என்பால் உண்டு. "குன்றம் ஏந்தி குளிர்மழை காத்த" அந்த எம்பெருமானை மனம் மொழி மெய்களால் வாழ்த்தி வணங்குகின்றேன்.

இன்ரு அறிகின்றேன் அல்லேன்; இருநிலத்தைச்
சென்ருங் களந்த திருவடியை; அன்று
கருக்கோட்டி யுள்கிடந்து கைதொழுதேன் கண்டேன்
திருக்கோட்டி எந்தை திறம்.

—பூதத்தாழ்வார்.

'வேங்கடம்'
சென்னை–40
11-5-1983

ந. சுப்புரெட்டியார்

---

5. இரண்டாம் திருவந்தாதி—87

# உள்ளுறை

பக்கம்



## பின்னிணைப்பு

# 1. கம்பனில் மக்கள் குரல்*

## 1

நினைப்பிற்கும் எட்டாத நெடுங்காலமாகவே இவ்வுலகெங்கணுமுள்ள நாடுகளில் கோனாட்சியே நிலவி வந்திருக்கின்றது. அரசர்கள் தம் கடமைகளில் தவறியதாலும் குடிமக்கள் அறிவு மிகுந்ததாலும் காலப்போக்கில் 'மக்களாட்சி' என்ற கருத்து முகிழ்த்து நிலைபெற்றுவிட்டது. பண்டைக் காலத்தில் தமிழ்நாட்டில் அரசோச்சிய சேரன் செங்குட்டுவன்,

''மழைவளம் கரப்பின் வான்பே ரச்சம்
பிழையுயி ரெய்தின் பெரும்பே ரச்சம்
குடிபுர வுண்டும் கொடுங்கோ லஞ்சி
மன்பதை காக்கும் நன்குடிப் பிறத்தல்
துன்ப மல்லது தொழுதகவு இல்''[1]

என்று தன் பொறுப்பை உணர்ந்ததுபோல் எத்தனைப் பேர்

---

* ஜனநாயகம் (நவம்பர்-டிசம்பர் 1958) இதழ்களில் வெளிவந்தது.

1. சிலப்—காட்சிக்—அடி (100-104)

உணர முடியும்? அரசர்கள் தம் கடமைகளை உணராமல் உரிமையை நிலைநாட்ட முயன்ற பொழுதுதான் "மக்களாட்சி" என்ற வித்து இந்த மானிலத்தில் ஊன்றப் பெற்றது. பண்டைய அரசர்கள் தம் பொறுப்புகளைப் பெரிதும் உணர்ந்திருந்தமையால், புறநானூற்றுப் புலவர் ஒருவர்,

"நெல்லும் உயிரன்றே நீரும் உயிரன்றே
மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்"[2]

என்று பாடினார்; மன்னன்தான் நாட்டின் உயிர் என்ற அக்காலக் கொள்கையை வெளியிட்டார். மேற் கூறிய பாடலடிகளினால் அக்கால மக்கள் அரசனை உயிர்போல் போற்றி வந்தனர் என்பதை அறிகின்றோம். காலப் போக்கில் மக்கள் குரலுக்கு மதிப்பு ஏற்பட்டது. பன்னிரண்டாம் நூற்றாண்டில் வாழ்ந்த கம்பன் மக்கள் குரலுக்கு மதிப்புக் கொடுத்து,

"வையம் மன்னுயி ராகஅம் மன்னுயிர்
உய்யத் தாங்கும் உடல் அன்ன மன்னன்"[3]

என்று பாடினான்; மாநிலத்தில் வாழும் மக்களை உயிராக்கி மன்னனை அவ்வுயிரைத் தாங்கும் உடலாக்கிவிட்டான். இன்னும் ஓரிடத்தில் தசரதன் நாட்டைப் பாதுகாத்தமையைக் கூறவந்த கவிஞர் பெருமான்,

வயிரவான் பூண் அணிமடங்கல் மொய்ம்பினான்
உயிரெலாம் தன்னுயிர் ஒப்ப ஓம்பலால்
செயிரிலா உலகினில் சென்று நின்றுவாழ்
உயிரெலாம் உறைவதோர் உடம்பும் ஆயினான்.[4]

என்று காட்டுகின்றான். இதிலும் அரசனை உடலாகவும்

---

2. புறம்-186
3. அயோத்—மந்தரை-17
4. பாலகா—அரசியல்-10

மக்களை உயிராகவும் காட்டியுள்ளமை எண்ணி மகிழ்தற்குரியது.

மக்களுக்காக மக்களால் 'மக்களாட்சி' என்று அமெரிக்க நாட்டு ஆப்ரஹாம்லிங்கன் குரல் எழுப்புவதற்கு முன்னரே கம்பநாடன் மக்களே நாட்டின் உயிர்நாடி என்ற குரலை எழுப்பிவிட்டான். கம்பன் காட்டும் கோசலத்தில் அரசர்களாக இருந்தவர்களும் மக்கள் குரலுக்கு மதிப்புக் கொடுக்கும் மன்னர்களாகவே வாழ்ந்து வந்தனர். உயிர் இல்லாத வழி உடல் இல்லாதது போல, குடிமக்கள் இல்லாத வழி அரசனும் இல்லை யாதலின் உலகை அரசனுக்கு உயிர் எனக் கூறியுள்ள மதி நுட்பம் மக்களாட்சியில் வாழும் நமக்கு ஓரளவு நன்கு புலனாகின்றது.

கம்பன் காவியத்தில் நாம் நான்கு அரசுகளைக் காண்கின்றோம்; நான்கும் கோனாட்சியே. இந்த நான்கிலும் மன்னன் சம்பந்தப்பட்ட நிகழ்ச்சிகளைப் பொதுமக்கள் திறனாய்வதைக் காண்கின்றோம். முப்பதாண்டுகளுக்கு மேல் மக்களாட்சியில் பழகி, அரசினர் மேற்கொள்ளும் நடவடிக்கைகளைத் திறனாயும் நமக்கு, அரசாங்க அலுவல்களைப் பொதுமக்கள் எந்த அளவுக்குத் திறனாய முடியும் என்பது விளங்காமற் போகாது. கோனாட்சியாக இருந்தாலும், பொதுமக்கள் அரசாங்க விஷயங்களிலும் அரசன் சம்பந்தப்பட்ட பிற துறைகளிலும் ஓரளவு பங்கு பெற்று இருந்தனர். முடியாட்சியாக இருந்தாலும், அரசனும் தான் மக்களுக்காகவே இருப்பதாக உணர்வதையும் மக்களும் தமது நிலைமையை ஓரளவு நன்கு உணர்ந்திருப்பதையும் கம்பன் நமக்கு இலைமறை காய்கள் போல் ஆங்காங்குச் சுட்டியுரைக்கின்றான். இனி, அவ்வாறு அவன் சுட்டி யுரைக்கும் இடங்களைக் காண்போம்.

## 2

காவியத்தில் நாம் முதன் முதலாகக் காண்பது அயோத்தி அரசு. எடுத்த எடுப்பில் அரசனைக் காட்டும் கவிஞன்,

தாயொக்கும் அன்பில்; தவம்ஒக்கும் நலம்ப யப்பில்;
சேயொக்கும் முன்னின் (று) ஒருசெல்கதி யுய்க்கும் நீரால்;
நோயொக்கும் என்னில் மருந்துஒக்கும்; நுணங்கு கேள்வி;
ஆயப் புகுங்கால் அறிவுஒக்கும் எவர்க்கும் அன்னான்[5]

என்று கூறுகின்றான். தயரதன் குடிமக்களிடம் காட்டிய அன்பு தாயன்புடன் ஒக்கும்; மக்களுக்கு அவன் செய்து வரும் நன்மைகளினால் அவன் தவத்தை யொத்திருப்பான்; நல்ல கதியில் செலுத்துவதில் மைந்தனை யொப்பான்; தீயோரை ஒறுத்தலில் நோயை ஒப்பானாயினும், தண்ணளி செய்தலில் மருந்தையும் ஒப்பான்; நுட்பமான நூல்களை ஆராயப் புகுமிடத்து, ஐயந்திரிபுகளைத் தெரிவிக்கும் அறிவை யொப்பான். இங்ஙனம் குடிதழீஇக் கோலோச்சும் தயரதன் நாடு புரத்தலைக் கூறுமிடத்து,

வையகம் முழுவதும் வறிஞன் ஓம்புமோர்
செய்யெனக் காத்தினி(து) அரசு செய்கின்றாள்[6]

என்று காட்டுகின்றான். மூலதனமில்லாத உழவன் தனக்கே உரித்தான சிறு கழனியை எங்ஙனம் மிகக் கருத்துடனும் பொறுப்புடனும் பாதுகாக்கின்றானோ, அங்ஙனம் உலகம் முழுவதையும் காத்து வருகின்றான் தயரதன். அவனுடைய மகனாகிய இராமனும் குடிமக்கள் உள்ளத்தையெல்லாம் கொள்ளை கொண்டவன். இதனை வசிட்டன் வாயில் வைத்து,

'கற்றவர் கற்றிலா தவரும்
உண்ணு நீரினும் உயிரினும் அவனையே உவப்பார்'[7]

என்று கவிஞன் பேசுகின்றான். இதனால் இராமன்—தயரதனுக்குப் பிறகு பாராளவேண்டியவன்—குடிமக்களிடம்

5. பாலகா—அரசியல்-4
6. ஷை ஷை -12
7. அயோ—மந்திரம்-42

எவ்வளவு செல்வாக்குடன் திகழ்ந்தான் என்பதை அறி கின்றோம்.

தயரதன் இராமனுக்கு முடிசூட்ட நினைக்கின்றான். மந்திரக் கிழவர்களை வருவித்து, அவர்களுடன் கலந்து ஆலோசிக்க எண்ணுகின்றான். உடனே 'மந்திரக் கிழவரை வருக என்றேவினான்.' மக்களுடன் தன்னைவிட நன்கு பழகும் அமைச்சர்களை யோசனை கேட்பதால், மக்களையே கேட்ட தாகும் என்று எண்ணியே மந்திரிமார்களுடன் சூழ்ந் தெண்ண நினைக்கின்றான்; அதன் பிறகும் சிற்றரசர்களுக்கும் ஓலை போக்கித் தன் கருத்தை தெரிவிக்கின்றான். அமைச்ச ரவையும் வேத்தவையும் இராமன் முடி புனைதற்கு ஒரு முக மாக உடன்பாட்டைத் தெரிவிக்கின்றன. அரசர்களைப் பார்த்துத் தயரதன் பேசும் பேச்சு நம் உள்ளத்தைக் கொள்ளை கொள்ளுகின்றது.

செம்மையில் தருமத்தில் செயலில் தீங்கின்பால்
வெம்மையின் ஒழுக்கத்தின் மேன்மை மேவினீர்!
என்மகன் என்பதென்? நெறியின் ஈங்கிவன்
நும்மகன் கையடை நோக்கும் ஈங்கென்றான்[8]

'இவனை என் மகன் என்று எண்ணவேண்டா; நும்மகன் போலவே கருதி, இவனுக்கு யாதொரு குறையும் வராமல் பாதுகாத்து வாருங்கள்' என்று கூறும் மன்னர் மன்னன் வாக்கில் மக்களாட்சியின் பண்பு மிளிர்வதைக் காணலாம்; மக்கள் குரலுக்கு எவ்வளவு மதிப்பு தருகின்றான் என்பதை யும் அறியலாம்.

இராமன் முடி புனையப் போகின்றான் என்ற செய்தி மக்களுக்கு எட்டுகின்றது. மக்கள் பேருவகை கொள்ளு கின்றனர். இளைஞர்கள் யாவரும் அடைந்த மகிழ்ச்சியைக் கம்பன்,

---

8. அயோ—மந்திர-87

பொங்கிய உவகை வெள்ளம் பொழிதரக் கமலம் பூத்த
கங்கையின் முகத்தார் கம்பி தம்பியர் அனைய ராஞர்[9]
[சங்கை—குற்றம்]

என்று காட்டுகின்றான். இளைஞர்கள் இராமன் தம்பியர் அடைந்த மகிழ்ச்சியை அடைந்தார்களாம்; வயது முதிர்ந்தவர்கள் பெற்ற மகிழ்ச்சி தயரதன் அடைந்த மகிழ்ச்சியைப் போலிருந்தது. அவ்வூர்ச்

சாதுகை மாந்தர் எல்லாம் தயரதன் தன்னை யொத்தார்[10]
[சாதுகை—சற்குணம்]

என்பது கம்பனின் வாக்கு. இங்ஙனம் இன்பத்தில் பங்கு கொண்ட மக்கள் இராமனுக்குத் துன்பம் வரும்பொழுதும் பங்கு கொள்ளுகின்றனர்.

இராமன் மகுடம் புனைதலுக்குத் தடை நேர்ந்து விட்டது என்பதை ஊர்மக்கள் அறிகின்றனர்; இராமன் கானளப் போகின்றான் என்ற செய்தியும் அவர்கட்கு எட்டுகின்றது. வசிட்டன் இச் செய்தியை அரசவையில் அறிவிக்கின்றான். இந்தக் கட்டத்தில் மக்கள் எழுப்பும் குரல் மயிர்க்கூச்செறிய வைக்கின்றது; தாங்கமுடியாத வருத்தத்தை அடைகின்றனர். கவிஞன் கூற்றில் சிலவற்றைப் பார்ப்போம்.

புண்ணுற்று தீயில் புகையுற்று உயிர்பதைப்ப
மண்ணுற்று அயர்ந்து மறுகிற்று, உடம்பெல்லாம்
கண்ணுற்று அவாரி கடலுற்றது; அங்கிலையே
விண்ணுற்றது எம்மருங்கும் விட்டழுத பேரோசை.

ஆ ஆ அரசன் அருளிலனே யாம் என்பார்;
காவாது அறத்தைஇனிக் கைவிடுவோம் யாம்என்பார்;
தாவாத மன்னர் தலைத்தலைவீழ்ந்து ஏங்கினர்;
மாவாதம் சாய்த்த மராமரமே போல்கின்றார்.

---

9. அயோத்—கைகேயிசூழ்-65
10. ஷை ஷை -66

மண்செய்த பாவம் உளது என்பார்; மாமலர்மேல்
பெண்செய்த பாவம் அதனிற் பெரிதுஎன்பார்;
புண்செய்த நெஞ்சை விதிஎன்பார்; பூதலத்தோர்
கண்செய்த பாவம் கடலில் பெரிதுஎன்பார்.

ஆளான் பரதன் அரசுஎன்பார்; ஐயன்இனி
மீளான் நமக்கு விதிகொடிது காண்என்பார்;
கோளாகி வந்தவா கொற்றமுடி தான்என்பார்;
மாளாத நம்மின் மனம்வலியார் ஆர்என்பார்.

ஆதி அரசன் அருங்கே கயன்மகள்மேல்
காதல் முதிரக் கருந்தழித்தான் ஆம் என்பார்;
சீதை மணவாளன் தன்னோடும் தீக்கானம்
போதும்; அதுவன்றேல் புகுதும் எரிஎன்பார்.

கையால் நிலந்தடவிக் கண்ணீர் மெழுகுவார்
உய்யாள்பொற் கோசலைஎன்று ஓவாது வெய்துயிர்ப்பார்
அய்யா; இளங்கோவே! ஆற்றுதியோ நீ! என்பார்;
நெய்யார் அழல்உற்றது உற்றுர்அந் நீள்நகரார்.

நின்று தவம்இயற்றித் தான்தீர தேர்ந்ததோ:
அன்றுஇவ் உலகத்துள் ஆருயிராய் வாழ்வாரைக்
கொன்று களையக் குறித்த பொருளொன்றோ?
நன்று! வரங்கொடுத்த நாயகற்கு நன்றென்பார்.

பெற்றுடைய மண்அவளுக்கு ஈந்து பிறந்துஉலகம்
முற்றுடைய கோவைப் பிரியாது, மொய்த்தீண்டி
உற்றுஉறைதும்; யாரும் உறையவே சின்னளில்
புற்றுஉடைய காடுஎல்லாம் நாடாகிப் போம்என்பார்.

என்னே நிருபர் இயற்கை இருந்தவா!
தன்னேர் இல்லாத தலைமகற்குத் தாரணியை
முன்னே கொடுத்து, முறைத்திறம்பத் தம்பிக்குப்
பின்னே கொடுத்தால் பிழையாதோ மெய்! என்பார்[11]

இவ்வாறு மக்கள் தம் அறிவு நிலைக்கேற்பவும் உணர்ச்சி

---

11. அயோ நகர் நீங்—97, 99, 105, 106, 107, 108, 110, 111, 112.

நிலைக்கேற்பவும் பலவாறு தயரதன் செயலையும் இராமன் நிலையையும் திறனாய்வதைக் கவிஞன் நமக்கு நேரில் காட்டுவதுபோல் காட்டுகின்றான். அரசன் அறத்தைக் கைநழுவ விட்டுவிட்டான் என்று அரசியல் பேசுவோர் சிலர்; வினைப்பயனை நொந்து கூறுவர் சிலர்; 'பரதன் ஆளமாட்டான்' என்று மனம்பதைத்துக் கூறுவோர் சிலர்; கிழட்டு அரசன் இளையாள்மீது கொண்டுள்ள மோகத்தால் கருத்தழிந்து விட்டான் என்பார் சிலர்; இலக்குவன் நிலையையும் அவன் இராமன்பால் கொண்ட அன்பையும் கண்ட சிலர் 'இளங்கோவே! பொறுக்க முடிகின்றதா?' என்று வாய்விட்டுக் கதறுவர்; 'வரங்கொடுத்த இலட்சணம் நன்றாக இருக்கின்றது?' என்று உலகியலை யொட்டிப் பேசுவர் சிலர்; 'நாம் எல்லோரும் காட்டிற்குச் சென்று விட்டால் அங்கே நகரம் உண்டாகிவிடும்' என்று புரட்சிக் கருத்துத் தெறிக்கப் பேசுவர் சிலர்; முன்னவனுக்கு அரசை முதலிற் கொடுத்து பின்னர் அதைப் பின்னவனுக்குக் கொடுத்தால் அது முறை திறம்பிய செயல் ஆகாதா? என்று சிலர் கூறுவர். சிந்தனையுள்ளவர்கள் எல்லோரும் பேசுவதைக் காட்டிய கவிஞன் ஒன்றும் அறியாப் பேதையரும் பிறரும் இராமன்பால் கொண்டிருந்த அன்பையும் காட்டுகின்றான்.

கிள்ளையொடு பூவை யழுத; கிளர்மாடத்து
உள்ளுறையும் பூசை அழுத; உறுவறியாப்
பிள்ளை அழுத; பெரியோரை என்சொல்ல
வள்ளல் வனம்புகுவான் என்றுரைத்த மாற்றத்தால்.

[பூசை—பூனை]

ஆவும் அழுத; அதன் கன்றழுத; அன்றலர்ந்த
பூவும் அழுத; புனல் புள்ளழுத கள்ஒழுகும்
காவும் அழுத; களிறுஅழுத; கால்வயப்போர்
மாவும் அழுதன; அம்மன்னவனை மானவே[12]

[கா—சோலை]

---

12. ஷெ நகர்நீங்—100, 102,

ஆறறிவுக்குக் கீழ்ப்பட்ட உயிரினங்களும் வருந்தின என்று கூறி இராமன் பிரிவால் அயோத்தி மக்கள் அடைந்த துன்ப மிகுதியைப் புலப்படுத்துகின்றான் கவிஞன். இங்ஙனம் இராமனுக்கு நேரிட்ட இடுக்கணைக் குறித்து மக்கள் எழுப்பிய அவலக் குரல் காட்டப் பெறுகின்றது.

இராமன், சீதை, இலக்குவன் ஆகிய மூவரும் வனத்திற்குப் பயணமாகும்போது ஊர் மக்களின் வருத்தத்தையும் மிக அழகாகக் காட்டுகின்றான் கவிஞன்.

அஞ்சன மேனிஇவ் வழகற்கு எய்திய
வஞ்சனை கண்டபின் வகிர்ந்து நீங்கலா
நெஞ்சினும் வலிதுஉயிர் நினைப்பது எனகடு
நஞ்சினும் வலியநம் நலம்என் றார்சிலர்[13]

இராமனுக்குக் கொடிய வஞ்சனையால் விளைந்த தீங்கினைக் கண்டும், தன்னலத்தின் காரணமாகத் தம் நெஞ்சு வெடிக்காமலிருக்கின்றதே என்றும் உயிர் உடலை விட்டு இன்னும் பிரியாதிருக்கின்றதே என்றும் கூறுவர் சிலர். 'இதுவரையில் இராமன் முடிபுனைந்து வருவான் என்று வழிமேல் விழிவைத்துக் காத்திருந்த நாம் அவன் கானேகுவதைக் காண்பதா? பெண் கொடிய வினையைச் செய்யும்படி ஏற்பட்ட நாட்டில் கண்கொண்டு பிறந்தது கழிபட்ட காரியம்' என்று பேசுவர் சிலர். இன்னும்,

முழுவதே பிறந்துஉலகு உடைய மொய்ம்பினோன்
உழுவைசேர் கானகத்து உறைவென் யான்என
எழுவதே! எழுதல்கண்டு இருப்ப தே! இருந்து
அழுவதே! அழகிதுஇவ் அன்பென் றார்சிலர்[14]

மூவரும் மரவுரி உடுத்து வீதியில் செல்வதைக் காணும் ஒரு சிலர் 'இந்த அயோத்தியில் சுமித்திரை பெற்ற

---

13. நகர்—189
14. ஷை —191.

இலக்குவன் மட்டிலுந்தானா இராமனுக்கு உறவு?' என்று பேசுகின்றனர். மேலும்,

நிறைமகவு உடையவர் நெறிசெல் ஐம்பொறி
குறைமக குறையினும் கொடுப்ப ராம்உயிர்;
முறைமகன் வனம்புக மொழியைக் காக்கின்ற
இறைமகன் திருமனம் இரும்புஎன் றார்சிலர்[15]

இவர்கள் கூற்றில் 'மொழியைக் காத்தல்' 'இறைமகன் 'திருமணம்' என்ற சொற்றொடர்கள் கேலிக் கூத்துக்கு இலக்காகி விட்டன. இன்றைய மக்களாட்சியில் பல நிகழ்ச்சிகள் நடைபெறும் பொழுது பலவாறு கிண்டலாகப் பேசும் நமக்கு இவர்கள் பேச்சு புரியாமற் போகாது. அன்றியும், நகரமாந்தர் அனைவரும் இராமன் சென்ற தேரைத் தொடர்ந்து செல்கின்ற காட்சியைக் காண்கின் றோம். கோனாட்சியாக இருப்பினும் குடிமக்களுக்கொத்த ஆட்சியாக இருந்ததால் குடிமக்களுக்குக் கொற்றவன் மீது அவ்வளவு ஈடுபாடு இருந்தது. இராமனை அழைத்து வருவதற்காக பரதன் காட்டிற்குச் சென்றபொழுதுகூட அயோத்தி மக்கள் அனைவரும் பரதனுடன் சென்றதி லிருந்து, ஆட்சியில் மக்கள் எவ்வளவு பங்கு கொண்டிருந் தனர் என்பது அறியக் கிடக்கின்றது.

இராமன் தான் அயோத்திக்குத் திரும்பி வருவதாகக் குறிப்பிட்டுச் சென்ற நாளில் திரும்பி வரவில்லை. உடனே பரதன் மின்னுதீயிடை வீழ்வதற்கு ஆயத்த மாகின்றான். அயோத்தி மக்கள் அவலக் கடலில் ஆழ்கின்றனர். பரதன் நெருப்பில் குதிப்பதற்குத் தயாராக இருக்கின்றான். திடீ ரென்று அநுமன் அங்குத் தோன்றி எரியை அவித்து விடு கின்றான். பிறகு இராமன் கொடுத்த அடையாளமாகிய மோதிரத்தையும் காட்டுகின்றான். அங்குத் திரண்டிருந்த மக்களும் இளையகோவும் அடைந்த நிலையைக் கவிஞன்,

15. நகர்நீங்—196,

ஊட்டிய வல்விட முற்று முற்றுவார்க்கு
ஊட்டிய நன்மருந் தொத்த தாமரோ;[16]

என்று சிறந்தொரு உவமையால் பெற வைக்கின்றான். இன்னும் சற்று வெளிப்படையாக,

அழுகின்ற வாயெல்லாம் ஆர்த்து எழுந்தன;
விழுகின்ற கண்ணெலாம் வெள்ளம் மாறின;
உழுகின்ற தலையெலாம் உயர்ந்து எழுந்தன;
தொழுகின்ற கையெலாம் காலின் தோன்றலை[17]

என்று அங்குள்ள காட்சியைப் படம் பிடித்துக் காட்டுகின்றான். பதினான்கு ஆண்டுகள் நிறைவெய்தி இராமன் திரும்பிவந்தபொழுது மக்கள் பேராரவாரத்துடன் வரவேற்கின்றனர். இராமன் புட்பக விமானத்திலிருந்த பொழுதே மக்கள் ஆர்த்தெழுப்பிய ஒலி இலங்கை நகர்க்கு அப்பாலும் எட்டி விட்டதாம். புட்பக விமானம் நிலத்தையடைந்ததும், அயோத்தி நகர் இருந்த நிலைமையை இவ்வாறு கூறுகின்றான் கவிஞன்:

தாயருக் கன்று சார்ந்த கன்றெனும் தகைய னானன்;
மாயையிற் பிரிந்தார்க் கெல்லாம் மனோலயம் வந்த தொத்தான்;
ஆயினை யார்க்குக் கண்ணுள் ஆடிரும் பாவை யானான்;
நோயுறுத் துலர்ந்த யாக்கைக்(கு) உயிர்புகுந்தாலும் ஒத்தான்.

எளிவரும் உயிர்கட் கெல்லாம் ஈன்றதாய் எதிர்ந்த தொத்தான்'
அளிவரும் மனத்தோர்க் கெல்லாம் அரும்பதம் அமுதம் ஆனான்;
ஒளிவரப் பிறந்த தொத்தான்; உலகினுக்கு கொண்கணார்க்குத்
தெளிவரும் களிப்புச் செய்யும் தேம்பிழித் தேறல் ஒத்தான்.

ஆவியங் கவன லான்மற்(று) இன்மையால் அனையநீங்க
காவியங் கழனி நாடு நகரமும் கவன்று வாழும்
மாவியல் ஒண்க ணாரும் மைந்தரும் வள்ளல் எய்த
ஓவியம் உயிர்பெற் றென்ன ஓங்கினர் உணர்வு பெற்றார்

16. யுத்த. மீட்சி—246.
17. ஷை —247.

சுண்ணமும் சாந்து நெய்யும் சுரிவளை முத்தும் பூவும்
எண்ணெயும் கவின மாவில் ஆழியும் எண்ணில் யானை
வண்ணவார் மதமும் நீரும் மான்மதம் தழுவும் மாதர்
கண்ணவாம் புனலும் ஓடிக் கடலையும் கடந்த அன்றே[18]

இக் கவிதைகளால் இராமன் மக்கள் மனத்தை எவ்வாறு கவர்ந்துள்ளான் என்பது அறியக் கிடக்கின்றது. இங்ஙனமே முடிபுனைந்த பொழுதும் மக்கள் அடைந்த மகிழ்ச்சியைக் கவிஞன் காட்டுகின்றான்.

## 3

அக்காலத்தில் மிதிலையிலும் கோனாட்சியே நிலவியிருந்தது. என்றாலும், அங்கும் அரசாட்சியில் மக்கள் மிகவும் அக்கறை கொண்டிருந்தனர். சனகன் சீதைக்குக் கன்னியா சுல்கமாக வைத்திருந்த வில்லை யாரும் வளைத்து நாணேற்ற முடியாததால் சீதையின் திருமணம் நடைபெறாமலே இருந்தது. அந்த வில்லை இராமன் வளைத்து நாணேற்றும் சந்தர்ப்பம் வருகின்றது; ஈசனது வில்லும் இராமனுக்கு முன்னர் கொண்டு வரப்பெறுகின்றது. பேராற்றலையுடைய அறுபதினாயிரம் பேர் அதனைச் சுமந்துகொண்டு வருகின்றனர். இதனைக் கண்ட மக்கள் பலர் பலவாறு பேசிக் கொள்ளுகின்றனர்.

சீதையின் திருமணத்தில்—தம் நாட்டு வேந்தன் மகளது திருமணத்தில்—அதிக அக்கறை கொண்டிருந்தவர்களுக்கு சனகன் வில்லைப் பணயமாக வைத்தது பிடிக்கவில்லை. வில்லே சீதையின் திருமணத்திற்குப் பெருந் தடையாக இருக்கின்றது என்று எண்ணுகின்றனர். ஓரிடத்தில் 'இந்த வில்லைக் கொண்டு வருக என்று எதற்காகச் சொன்னான் இவ்வரசன்?' என்பர் சிலர்; மற்றும் சிலர்

---

18. யுத்த: மீட்சி— 337, 338, 339, 340.

'வில்லைக் கன்யா சுல்கமாக வைத்த இவனைப் போல அறிவுக் கேடரான அரசர்களும் உளரோ?' என்று கூறுவர். 'முற்பிறவியிற் செய்த ஊழ்வினையினால்தான் ஒருகால் இச் செயல் கைகூடினாற் கூடலாம்' என்று வேறு சிலர் உரைப்பர்; இன்னும் சிலர் 'சீதாப்பிராட்டி யாவது இந்த வில்லைப் பார்த்திருக்கக் கூடுமா?' என்று மொழிவர். மற்றோரிடத்தில் மக்கள் பேசிக் கொள்வதையும் கவிஞன் காட்டுகின்றான்.

இச்சிலை யுதைத்தகோற் கிலக்க மியாதென்பார்
நச்சிலை நங்கைமே னாட்டும் வேங்தென்பார்
நிச்சய மெடுக்குங்கொய் நேமி யானென்பார்;
சிற்சிலர் விதிசெய்த தீமைதான் என்பார்[19]

மகளிர்க் கூட்டத்திலும் பேச்சு நிகழத்தான் செய்கின்றது. அனைவரும் அரசன் பெரிய வில்லைத் திருமணத்திற்குத் தடையாக வைத்தது பெரும் பிழை என்று ஒருமுகமாகத் தம் கருத்தைத் தெரிவிக்கின்றனர்.

வள்ளல் மணத்தை மகிழ்ந்தனன் என்றால்
கொள்ளென முன்பு கொடுப்பதை அல்லால்
வெள்ள மணைத்தவன் வில்லை எடுத்துஇப்
பிள்ளைமுன் இட்டது பேதைமை என்பார்;

ஞான முனிக்கொரு நாண்இலை என்பார்;
கோனிவ னிற்கொடி யோனிலை என்பார்;
மானவன் இச்சிலை கால்வளை யானேல்
பீன தனத்தவள் பேறிலள் என்பார்.[20]

[பீன—பருத்த]

'சீதையின் திருமணத்தில் அரசன் உண்மையில் அக்கறை கொண்டவனாக இருந்தால், தகுந்த மணமகன் வந்த பொழுதே திருமணத்தை முடித்து விட வேண்டும்.

19. பால. கார்முகம்—9
20. ஷை 30, 31.

சிவத்தனுசைக் குறுக்கே கொண்டு வந்து போடுவதனுல் திருமணத்தில் அக்கறை இல்லை என்றுகின்றது; அல்லது, தன்வசமிழந்தவனுக இருக்கவேண்டும்'—இங்ஙனம் ஒரு பேச்சு நிகழ்கின்றது. 'விசுவாமித்திரனுக்காவது மதிவேண்டும்; அவனும் வில்லை முறிக்க அனுமதி தந்துவிட்டான். இந்த அரசனைக் காட்டிலும் கொடியவன் இவ்வுலகில் இல்லை. இராமன் இவ்வில்லை வளையாஞகில், சீதைக்கு வாழ்வே இல்லை'—இப்படியும் ஒரு பேச்சு நிகழ்கின்றது. மிதிலை யாட்சியில் இதற்குமேல் மக்கள் குரலைப்பற்றி அறியக்கூடவில்லை.

## 4

இனி, கிட்கிந்தை அரசைக் காண்போம். வாலி கொடுத்த தொல்லையைத் தாங்க முடியாமல் சுக்கிரீவனும் அநுமன் உட்பட பல வானர வீரர்களும் ருசியமுக பருவதத்தைத் தம் இருப்பிடமாகக் கொண்டு வாழ்ந்து வருகின்றனர். இந் நிலையில் அநுமனுல் இராம-சுக்கிரீவ நட்பு ஏற்படுகின்றது. சுக்கிரீவனைப் பலர் சூழ்ந்திருந்தனர் என்பதிலிருந்தே அவனை ஆதரிக்கும் ஒரு வானரக் கூட்டம் இருந்ததாகக் கருதவேண்டியுள்ளது. தவிர, மக்கள் கருத்திற்கிசைந்தே வானர ஆட்சியும் நடைபெற்று வந்தது என்பதற்கு வேருெரு சான்றும் உள்ளது.

பிலம்புக் காய்நெடு நாள்பெய ராயெனுப்
புலம்புற் றுன்வழிப் போதலுற் ருன்றனைக்
குலம்புக் கான்ற முதியற் குறிக்கொள்நீ
அலம்பொற் ருரவ னேயர சென்றலும்[21]

என்பது வாலிவதைப் படலத்திலுள்ள ஒரு பாடல்; இராமன் தான் வாலியைக் கொன்றது நியாயமே என்று எடுத்துக் காட்டுவது. முன்னெரு காலத்தில் மாயாவி

21. கிட்கிந்தை-வாலிவதை—92

என்ற ஓர் அரக்கன் வாலியை வந்தெதிர்த்தான். வாலி அவனைத் துரத்திக்கொண்டு சென்று இறுதியில் பாதாள லோக வழியாகிய பெரிய பிலத்தினுள்ளே சென்று நீண்ட நாள் திரும்பவில்லை. சுக்கிரீவன் மிகவும் துன்பமடைந்து தானும் அப்பிலத்தினுள் சென்று அம்மாயாவியுடன் போரிட முற்பட்டான். ஆனால், வானர குலத்திலுள்ள பெரியோர்களில் சிலர் அவனை மறித்து, 'நீயும் போய் விட்டால் எங்கட்குக் கதி யார்? இனி நீயாவது இருந்து அரசாட்சி செய்' என்று வெகுவாய்ச் சொல்லி நிறுத்தினார்கள்-என்ற வரலாற்றை நாம் அறிகின்றோம். இதனால் சுக்கிரீவன் மக்கள் குரலுக்குக் மதிப்புக் கொடுத்து மன்னனாக இருக்க ஒருப்பட்டான் என்பது அறியக் கிடக்கின்றது. வாலி இறந்ததனால் தாரை, அங்கதன் ஆகியோரைத் தவிர வேறு ஒருவரும் துக்கப்பட்டதாகக் கவிஞன் காட்டவில்லை. கோசல நாட்டிலும், மிதிலை நாட்டிலும் அரச குடும்ப நிகழ்ச்சிகளிலெல்லாம் மக்கள் குரலைக் காட்டிய கவிஞன், கிட்கிந்தை நாட்டு அரசன் இறந்ததற்குக் கூட மக்கள் உட்கிடக்கையைக் காட்டாததால், வாலியாட்சி மக்கள் கருத்திற் கிணங்க நடைபெறவில்லை என்று ஊகிக்க வேண்டியுள்ளது.

சுக்கிரீவனுக்கு முடி புனைவித்து சில அரச நீதிகளைப் புகட்டுகின்றான் இராமன். அவற்றின் சாரம் மக்கள் குரலுக்கு மதிப்புக் கொடுக்க வேண்டும் என்பதே; மக்கள் கொதித்தெழுந்தால் பெரிய வல்லரசும் கவிழ்ந்துவிடும் என்பதைக் கவிஞன் இராமன் மூலமாகப் பேசுகின்றான் என்று கொள்வதே ஏற்புடைத்து.

வாய்மைசால் அறிவின் வாய்த்த மந்திர மாந்த ரோடும்
தீமைதீர் ஒழுக்கின் வந்த திறத்தொழின் மறவ ரோடும்
தூய்மைசால புணர்ச்சி பேணித் துகளறு தொழிலையாகிச்
சேய்மையோ டணிமை யின்றித் தேவரில் தெரிய நிற்றி.[22]

22. கிட்கிந்தை-அரசியல்—7

இதில் அமைச்சர்களுடனும் சேனை வீரர்களுடனும் பிற ருடனும் எப்படிப் பழகிக் காரியங்களைக் கொண்டு செலுத்த வேண்டும் என்று கூறுகின்றான்.

மக்களுக்காக ஏற்பட்டுள்ள ஆட்சியில் இயன்றவரை மக்களுடன் பகைமை வைத்துக்கொள்ளலாகாது; 'அற்பப் பகைமைதானே' என்று எண்ணி சிறிய பகைக்கும் இடங்கொடுத்தலாகாது. அத்தகைய ஒரு சிறிய பகை, இராமன் கூனியிடம் இளம்பருவத்தில் நேரிட்டது. அஃது இராமனைப் பல்வகைத் துன்பங்களுக்கு ஆளாக்கிவிட்டது. இதனை நினைவுகூர்ந்து சுக்கிரீவனிடம் பேசுகின்றான் இராமன்.

சிறியரென் றிகழ்ந்து நோவு செய்வன செய்யன் மற்றிந்
நெறியிகந் தியானோர் தீமை இழைத்தலால் உணர்ச்சி நீண்டு
குறியதா மேனி யாய கூனியாற் குவவுத் தோளாய்
வெறியன வெய்தி நொய்தின் வெந்துயர்க் கடலின் வீழ்ந்தேன்.[23]

சொந்த அநுபவத்தை மனத்திற்கொண்டு மனம் விட்டும் பேசுகின்றான் இராமன். மக்களைத் தாய்போற் பேணவேண்டும் என்பது மக்களாட்சியின் தத்துவம்; இவ்வாறு சிறந்த முறையில் நடைபெறும் ஆட்சிக்கு ஊறு பயக்கச் சிலர் கிளம்பினால், அவர்களை அறநூலின் எல்லை கடவாத படி ஒறுத்தல் வேண்டும்.

'நாயகன் அல்லன் நம்மை நனிபயந்து எடுத்து நல்கும்
தாய்' என இனிது பேணத் தாங்குதி தாங்கு வாரை
ஆயது தன்மை யேனும் அறம்வரம்பு இகவா வண்ணம்
தீயன வந்த போது சுடுதியால் தீமை யோரை;[24]

ஒரு நாட்டு அரசனுக்கு, அறநூற்கருத்து மிகவும் இன்றியமையாதது என்பதைப் பின்னும் வற்புறுத்துகின்றான்.

23. கிட்கிந்தை-வாலி வதை-9?—அரசியல்-11
24. ஷை 13

இறத்தலும் பிறத்தல் தானும் என்பன இரண்டும் யாண்டும்
திறத்துளி நோக்கிற் செய்த வினைதரத் தெரிந்த அன்றே
புறத்தினி யுரைப்ப தென்னே பூவின்மேற் புனிதற் கேனும்
அறத்தினது இறுதி வாழ்நாட் கிறுதியஃ துறுதி என்ப.[25]

*நான்முகனும் அறத்தினின்று வழுவினால் அழிவது திண்ணம்: அறம்பிறழாமையே வாழ்நாளுக்கு உறுதிபயக்கும்.*

*வாலியை விட சுக்கிரீவன் வலியற்றவன் என்பதை இராமன் நன்கு அறிவான். ஆட்சி மாற்றத்தால் கிட்கிந்தை நாட்டில் யாதேனும் குழப்பம் விளையக்கூடும் என்பதை எதிர்பார்க்கவும் செய்கின்றான். அநுமனுக்கு அறவுரை பகர்ந்து அனுப்பும்பொழுது இதனை அறிகின்றோம்.*

நிரம்பினான் ஒருவன் காத்த நிரையரசு இறுதி நின்ற
வரம்பிலாது அதனை மற்றோர் தலைமகன் வலிதிற் கொண்டால்
அரும்புவ நலனும் தீங்கும் ஆகலின் ஐய! நின்போற்
பெரும்பொறை அறிவி னோரால் நிலையினைப் பெறு வதம்மா.[26]

*அறிவு, ஆண்மை, பெருமை என்ற மூவகைத் திறனும் நிரம்பிய ஒருவனது ஆட்சியை அம் மூன்றிலும் ஓரளவு குறைவுள்ள மற்றொருவன் வலிதிற்கைகொண்டால், அத்திறன்கள் குறைவு காரணமாகவோ மக்களிடமிருந்து குழப்பம் விளையக்கூடும் என்று இராமன் எதிர் பார்த்தனன் என்றால், அரசனும் மக்களும் ஆட்சியைப் பற்றி எவ்வளவு தூரம் சிந்தித்திருந்தனர் என்று கருத வேண்டியுள்ளது.*

*'எந்தையே இராகவ சரணம்' என்ற சொல்லுடன் வீடணன் இராமனிடம் அடைக்கலம் புகுகின்றான். இராமன் அவனைச் சேர்த்துக்கொள்வதா? அன்றி விட்டு*

---

25. *அரசியல்—14*
26. *ஷை —28*

விடுவதா? என்று தம் நண்பர்களுடன் கலந்தாய்கின்றான். சுக்கிரீவன், சாம்பவான், நீலன் ஆகிய தலைவர்களும் மற்றுமுள்ளோரும் வீடணனை ஏற்றுக்கொள்ளலாகாது என்று ஒரு முகமாகக் கூறுகின்றனர். இறுதியில் அநுமன், வீடணன் தீயவன் அல்லன் என்று காரணங்களுடன் கூறி, வீடணன் வரவு நல்வரவாகட்டும் என்று எடுத்துரைக்கின்றான். இராமன் அவண் இருந்தோரை நோக்கிக் கூறுகின்றான்:

**மாருதி வினய வார்த்தை செவிமடுத்து அமிழ்தின் மாந்திப்**
**'பேரறி வாள நன்று! நன்றெனப்' பிறரை நோக்கிச்**
**'சீரிது மேலிம் மாற்றம் தெளிவுறத் நேர்மின்' ஒன்று**
**ஆரியன் உரைப்ப தானன்; அனைவரும் அதனைக் கேட்டார்.[27]**

அநுமன் உரைத்தது சரியேயென்று தக்க காரணங்களுடன் எடுத்துவிளக்கி வீடணனை ஏற்றுக்கோடலே தக்கது என்று முடிவும் கூறுகின்றான். வீடணனைக்கொணருமாறு சுக்கிரீவனையே அனுப்புகின்றான் இராமன். இந்த நிகழ்ச்சியால் இராமன் மக்கள் குரலுக்கு மதிப்புக் கொடுத்தமையையும், கிட்கிந்தை அரசனிடம் தான் உதவித் வேண்டித் தோழமை பூண்டிருந்த பொழுதும் அப்பண்பைப் பலர் அறியக் காட்டினமையையும் அறிகின்றோம்.

## 5

இறுதியாக, இலங்கை அரசில் மக்கள் குரலுக்கு என்ன மதிப்பு இருந்தது என்பதைக் காண்போம்: ஆரணிய காண்டத்தில்தான் முதன்முதலாக இராவணன் அரசு வீற்றிருக்கும் சிறப்பு காட்டப்பெறுகின்றது. இந்நிலையில் 'மூக்கும் காதும் வெம்முரண் முலைக் கண்களும்' இழந்த சூர்ப்பணகை இலங்கை நகர்க்கு வருகின்றாள். அவள் வந்த நிலையைக் கவிஞன் இவ்வாறு கூறுகின்றான்:

---

27. யுத்த வீடணன் அடைக்—106

தங்கையும் அவ்வழித் தலையில் தாங்கிய
செங்கையள்; சோரியின் தாரை சேந்துஇழி
கொங்கையள், மூக்கிலள்; குழையில் காதிலாள்;
மங்குலின் ஒலிபடத் திறந்த வாயினள்;[28]

[மங்குல்-மேகம்]

*இவள் இலங்கை நகரின் வடதிசை வாயிலின் வழியாக இலங்கை நகர்க்குள் நுழைகின்றாள்; தன்னுடைய குறையை எடுத்து உரக்கக் கூறிக்கொண்டு வருகின்றாள். அவளது அவல நிலையைக் கண்ட அரக்கப் பெருமக்கள் மிகவும் துயருறுகின்றனர். முக்கியமாக மகளிர் சோகத்துடன் அழுகின்றனர். அவளைக் கண்ணுற்ற ஆண்மக்கள் ஒன்றும் சொல்லத் தெரியாதவராய்த் திகைத்து நிற்கின்றனர்; கோபக்கனல் தெறிக்க உதட்டைக் கடித்துக்கொண்டு வாளா நிற்கின்றனர். இத்தகைய அவமானம் நேர்ந்தது தேவேந்திரனாலோ? அல்லது உலகைப்படைத்த மலரவன் பாற்பட்டதோ? அல்லது ஆழியான் காரணமாக இருப்பானோ? அன்றி, சந்திரனை முடியில் தரித்த சிவனிடத்தில் பொருந்துவதோ? என்று பலவாறு அயிர்த்து மனங்கொதிக்கின்றனர் சிலர். இந்த அண்டத்தில் இராவணனுக்குப் பகைரொருவருமில்லையாதலின், வேறு அண்டங்களிலுள்ளவர் யாராவது இத்தீங்கினை இழைத்திருத்தல் கூடும் என்று சிலர் உரைக்கின்றனர். இன்னும் சிலர் சூர்ப்பணகைக்கு ஏற்பட்ட செய்கையில் ஏதோ சூழ்ச்சி இருக்க வேண்டும் என்று ஐயுறுகின்றனர்.*

'என்னையே இராவணன் தங்கை என்றபின்
அன்னையே என்றடி வணங்கல் அன்றியே
உன்னவே யொண்ணுமோ ஒருவ ரால்இவள்
தன்னையே அரித்தனள் தான்என் றார்சிலர்.[29]

---

*28.* ஆரணிய-மாரீசன்வதை—*24*
*29.* ஷை —*30*

அவளாகவே அரிந்து கொண்டிருக்கவேண்டும் என்பது சிலரது ஐயம். இக்கருத்தையே இன்னொரு விதமாக வீடணன் கொண்டிருத்தலைப் பின்னால் காண்கின்றோம்.

கொல்லாத மைத்துனனைக் கொன்றாய்என்(று)
அதுகுறித்துக் கொடுமை சூழ்ந்து
பல்லாலே இதழ்அதுக்கும் கொடும்பாவி
நெடும்பாரில் பழிதீர்ந் தாளோ?[30]

என்று இதனைக் கம்பன் காட்டுகின்றான். வேறு சிலர். ஒருகால் இவள் கற்புநிலை கடந்துவிட்டாள் என்று கருதி கரன் இவளை அழகற்றவளாகச் செய்திருக்கக் கூடுமோ என்று அயிர்க்கின்றனர். இன்னும் சிலர் முனிவர்களுடைய வெகுளியின் முடிவாக இருக்கக் கூடுமோ என்று கூறுகின்றனர். இந்த இடத்தில் பொதுமக்கள் பலவாறு தத்தமக்குத் தோன்றியவாறு பேசுவதைக் காண்கின்றோம்.

இந்திரசித்து அநுமனை மலரவன் கணையால் பிணித்துத் தெருவழியே இழுத்துச் செல்லும்பொழுது அரக்கன் பலர் திரளுகின்றனர். அப்பொழுது அநுமனை என்ன செய்யவேண்டுமெனப் பலர் பல்வேறு கருத்துகளைத் தெரிவிக்கின்றனர்.

நச்சடை படைகளான் நலியும் மீண்டதோ
வச்சிர மூடன்மறி கடலின் வாய்மடுத்து
உச்சியின் அழுத்துமின் உருத்த நின்றெனிற்
கிச்சிடை யிடுமெனக் கிளக்கின் றார்பலர்.

எந்தையை எம்பியை எம்மு னோர்களைத்
தந்தனை போகெனத் தடுக்கின் றார்பலர்
அந்தரத் தமரர்தம் ஆணையால் இவன்
வந்ததென் றுயிர்கொள மறுகினார் பலர்.[31]

என்ற பாடல்களில் இவற்றைக் காணலாம். ஆனால்,

30. இராவணன் வதை - 225
31. பிணிவீட்டு - 3, 4

அரசனைப்பற்றியோ, ஆட்சியைப்பற்றியோ, அல்லது அரசன் செயலைப்பற்றியோ யாதொன்றும் காணப்பெற வில்லை. சீதையைச் சிறையிட்டதால்தான் இவ்விளைவுகள் யாவும் நேரிட்டன என்று ஒருவர்கூடப் பேசவில்லை. இராவணன் சீதையைச் சிறையிட்டது பலருக்கு உடன் பாடாக இருந்திருக்கலாம்; அல்லது, அரசனது ஆணைக்குப் பயந்து வாய்பேசாது அடங்கியும் இருக்கலாம்.

அநுமனால் எரியுண்ட இலங்கையைத் தெய்வ தச்சன் புதுப்பித்த பிறகு இராவணன் மந்திராலோசனை சபை யைக் கூட்டுகின்றான். இதில் தனக்கு வேண்டியவர்களை மட்டிலும் வருவித்து, பிறரையெல்லாம் புறத்தே போக்கி விடுகின்றான். அவையின்கண் யாரும் வாராதிருக்கக் காவ லாளரை நிறுவுகின்றான். குரங்கினால் அவமானம் அடைந் ததற்கு மிகவும் மனவருந்திக் கூறுகின்றான். வீடணனைத் தவிர, ஒருவராவது இராவணனது தவற்றை எடுத்துரைக்க வில்லை. ஆனால், கும்பகருணன் மட்டிலும் 'பிறன்மனை நோக்கிய அன்றே அரக்கர் புகழ் அழிந்துவிட்டது என்றும், கௌரவத்தின் காரணமாகச் சீதையைத் திரும்பக் கொண்டு விடுதல் தம்முடைய எளிமையைப் புலப்படுத்தி விடும் என்றும், இவ்வாறு செய்வதைவிட போரில் இறந்து படுதலே தக்கது என்றும் எடுத்துரைக்கின்றான். இவற்றை யெல்லாம் நோக்குமிடத்து, இலங்கையில் உள்ள மந்திர சபை. அரசனுக்கிணங்க இயங்கியது என்று அறிகின்றோம். இன்னும் இராவணன் ஆணைக்கும் ஆற்றலுக்கும் பயந்தே, ஒரு கால் மக்கள் குரல் எழுப்புவதற்கே அஞ்சி வாழ்ந் தனரோ என்றுகூட ஊகிக்க வேண்டியுள்ளது.

## 6

எனவே, கம்பன் காவியத்தின் பல்வேறு சந்தர்ப்பங் களில் 'மக்கள் குரலைக்' கண்டோம். கோனாட்சியாக இருப்பினும் குடியாட்சிக் கருத்துகளுக்குக் கம்பன்

முதலிடங் கொடுத்துள்ளான் என்பது ஆங்காங்கு பல்வேறு சந்தர்ப்பங்களில் காட்டப்பெறுகின்றது. மக்கள் குரலுக்கு மன்னர்கள் மதிப்புக் கொடுத்தமையால், கோனாட்சி மிகச் சிறப்பாக நடைபெற்று வந்தது. முறைசெய்து மக்களை மன்னர்கள் காப்பாற்றியதால் மக்கள் அவர்களை இறையென்றே எண்ணி வந்தனர். ஆளுவது முக்கிய மன்று; ஆட்சி முறையே முக்கியம் என்பதை அக்கால மக்கள் நன்கு அறிந்திருந்தனர். கம்பன் காவியத்தில் இவற்றையெல்லாம் நன்குக் காண்கின்றோம்.

# 2. காவியத் தம்பி*

'உடன் பிறப்பு இல்லா உடம்பு பாழ்' என்பது ஆன்றோர் வாக்கு. இராமனுக்குத் தம்பியர் பலர்; கூடப் பிறந்தோர் மூவர்; பிறப்புத் தளையில்லாது போயினும் அதை விட வலிமையான அன்புத் தளையால் பிணிக்கப் பட்டுக் கூடச் சேர்ந்தோர் மூவர். தனக்கு ஆறு தம்பியர் இருக்கின்றனர் என்பதை இராமனே கூறுகின்றான். இராமனைச் சரண் அடைந்த வீடணன் தாழ் கடல் இலங் கைச் செல்வத்தைப் பெறுவதற்கு அடையாளமாக இலக்கு வன் அவனுக்கு முடி சூட்டுவதற்கு முன்பு வீடணன் இராமனை வணங்கி,

"என்றும் வீயா
அளவறு பெருமைச் செல்வம்
அளித்தனை ஆயின் ஐய!
களவியல் அரக்கன் பின்னே
தோன்றிய கடன்மை தீர
இளையவற் கவித்த மோலி
என்னையும் கவித்தி"[1]

---

* அமுத சுரபி (தீபாவளி மலர் 1954) யில் வெளி வந்தது.

1. வீடணன் அடைக்-145.

[என்றும் - எப்பொழுதும்; வீயா - அழியாத; அளவறு-எல்லையில்லாத; களவியல்-வஞ்சனைத் தன்மையுடைய; கடன்மை - (தம்பியாகப் பிறந்த) தொடர்பு; தீர-ஒழியும்படி; இளையவற்கு-பரதனுக்கு; மோலி-கிரீடம்]

என்று வேண்டுகின்றான். எப்போதும் நிலைத்து நிற்கக் கூடிய எல்லையில்லாத பெருஞ் செல்வத்தை அடியேனுக்கு அளிக்கக் கருணை புரிந்து. தீமையும் வஞ்சனையும் உருவெடுத்தாற்போன்ற இராவணனுக்குத் தம்பியாகப் பிறந்த தொடர்பு முதலில் அறும்படி செய்தல் வேண்டும்; அதன் பிறகு உன் தம்பியாகிய பரதாழ்வானுக்குச் சூட்டிய அதே கிரீடத்தையே அடியேனுக்கும் அருள் புரிவாயாக'' என்று வீடணன் வேண்டி நிற்கின்றான்.

அதற்கு இராமன் பதில் கூறுகின்றான்: ''எம்மிடத்து அன்போடு வந்திட்ட ஐயனே, நாங்கள் நால்வரே தசரதனுக்கு மைந்தர்களாகப் பிறந்தோம்; நாங்கவ் காட்டுக்கு வந்த பிறகு குகனுடைய நட்பு ஏற்பட்டது. அவனைத் தம்பியாகவே ஏற்றுக் கொண்டதால் ஐவராகினோம். பிறகு சுக்கிரீவன் வந்து சேர. அறுவராக நேர்ந்தது. இப்போது நீயும் 'தம்பிக்குச் சூட்டிய மௌலியைச் சூட்டுக!' என்று வேண்டியதனால், உன்னையும் தம்பியாகவே சேர்த்துக் கொள்கின்றோம். சேர்த்துக் கொள்ளவே, நாம் எழுவராகி விட்டோம். என்னைக் காட்டுக்கனுப்பியதனால் உன்னுடைய தந்தையாகிய தசரதன் அதிகப் புத்திரர்களை அடைந்து விட்டான்.'' இதனைக் கம்பன்;

குகனொடும் ஐவர் ஆனோம்;
முன்புபின் குன்று சூழ்வான்
மகனொடும் அறுவர் ஆனோம்;
எம்முழை அன்பின் வந்த

அகன் அமர் காதல் ஐய!
நின்னொடும் எழுவர் ஆனோம்!
புகல் அரும் கானம் தந்து
புதல்வரால் பொலிந்தான் உந்தை[2]

[குன்று சூழ்வான்-மேருமலையைச் சுற்றி வரும் சூரியன்; அவன் மகன்-சுக்கிரீவன்; எம்முழை-எம்மிடத்து; அகம்-உள்ளம்; காதல்-அன்பு; புகல் அரும்-புகுதற்கு அரிய]

என்று காட்டுகின்றான். இராமன் வீடணனிடம் கூறும்போது எந்தை என்னாது 'உந்தை' என்றதால், தான் தம்பியாக அங்கீகரித்ததை வற்புறுத்துவதற்காகவே என்று கொள்ளவேண்டும்.

இன்று இவ்வுலகில் நல்ல சகோதரர்கள் வாய்த்திருக்கும் குடும்பம் வறுமை நிலையிலிருந்தாலும் செல்வத்தில் திளைத்திருந்தாலும் சிறப்புடன் விளங்குவதைக் காணத்தான் செய்கின்றோம். அத்தகைய குடும்பத்தில் உள்ளவர்கள் எவ்விதப் பகைக்கும் அஞ்ச வேண்டியதில்லை என்பது அநுபவத்தில் நாம் காணும் உண்மை. கூர்ந்து கவனித்தால் இவ்வுலகில் பல சான்றுகளைக் காணலாம்.

அந்தக் காலத்தில் இராமனுக்கு நல்ல தம்பியர் கூடப் பிறந்தாலும், சேர்ந்த தம்பியரும் சான்றோராக அமைந்து விட்டதாலும் இராமன் தன் வாழ்க்கையில் கண்ட பல பகைகளையும் எளிதாகச் சமாளித்துக் கொள்கின்றான்.

''தாயுரை கொண்டு தாதை
உதவிய தரணி தன்னைத்
தீவினை என்ன நீத்துச்
சிந்தனை முகத்தில் தேக்கிச்''[3]

---

2. ஷ்ௌ - 146
3. குகப்படலம் - 35

சென்ற பரதன் ஆயிரம் இராமர்களும் அவனுக்கு ஒப்பா கார் என்று குகனுல் பாராட்டப் பெற்றவன், தனக்குத் தம்பியாக வாய்த்த காரணத்தால் இராமனுக்கு மந்தரை யின் சூழ்ச்சியால் நேரிடவிருந்த பலவகைத் துன்பங்களும் விலகிப் போகின்றன. இராமன் பெயரை வைத்துக் கொண்டு பரதன் நாட்டையாண்டு வந்ததால், பதினுன்கு ஆண்டுகளிலும் நாட்டில் யாதொரு குழப்பங்களும் உண் டாகவில்லை. சுக்கிரீவனின் நட்பாலும் வீடணனுடைய சேர்க்கையாலும் சிறைப்பட்ட செல்வியின் இருப்பிடத்தை அறிவதிலும் அவளை மீட்பதிலும் பல ஆதரவுகள் கிடைக் கின்றன, மலைபோல் காணப்படும் பல சங்கடமான கட்டங்கள் யாவும் பனிபோல் மறைந்து விடுகின்றன என்பதை இராமாயணக் கதையை அறிந்தவர்களுக் கெல்லாம் தெரியும்.

ஆனுல், 'இராமன் பின்புப் பிறந்தானும் உளன் என்னப் பிரியாதான்' ஆகிய இலக்குவன் தம்பியாக அமைந்த காரணத்தினுல்தான் இராமன் எவ்விதப் பகைக் கும் அஞ்சவேண்டிய அவசியம் இல்லாமல் போய் விடு கின்றது. அன்பே வடிவாக உடைய பரதனே இலக்குவனை

'யான் என்றும் முடி(வு) இலாத
துன்பத்துக் (கு) ஏது வானேன்
அவன் அது துடைக்க நின்றுன்'[4]

என்று பாராட்டுகின்றுன். அவன் என்றது, இலக்குவனை; இத்தகைய இலக்குவன் தனக்குத் தம்பியாக அமைந்த காரணத்தாலும், தனது வாழ்விலும் தாழ்விலும் தன்னை நிழல்போலத் தொடர்ந்து வந்ததாலும், இராமன் முன்பு எவ்விதப் பகையும் எதிர்த்து நிற்கவில்லை என்பதை இராமனே ஒரு தடவையன்று, பல தடவைகளில் பாராட்டியுள்ளான்.

4. குகப்பட-43.

சீதையை மீட்டுவிக்க இராமன் இராவணனுடன் போரிடும்போது இராவணனுக்குப் பக்க பலமாய் இருந்து கடுமையாகவும் உக்கிரமாகவும் போர் புரிந்தவர்களில் இராவணனுடைய முதற் புத்திரனை இந்திரசித்து குறிப்பிடத்தக்கவன். தூது செல்லும்போது எவராலும் எதிர்த்து நிற்க முடியாத அநுமனை மலரவன் படையால் கட்டிக் கொணர்ந்து தன் தாதைமுன் நிறுத்தியவன். இவன் பெயரைக் கேட்ட மாத்திரத்தானே குரங்குப் படையின் குலை நடுங்கும்; அவ்வளவு கொடுமையாகப் போர் புரிந்தவன். கும்பகருணனுக்குப் பிறகு அதிகாயனைப் பலி கொடுக்கின்றான் இராவணன். அதிகாயனைக் கொன்றவன் யார் என்பதை இராவணனால் அறிந்தவுடன் அவனிடம் இவன்,

**'கொன்றார் வரோய்? கொலைசூழ்க என**
**நீ கொடுத்தாய்'[5]**

என்று கூறிக் கோபிக்கின்றான். அட்சயனைத் தரையோடு தரையாகத் தேய்த்த அநுமனை தூது வந்த அன்றே கொல்லாததனால் ஏற்பட்ட விளைவுதான் இது என்று எடுத்துக் காட்டுகின்றான் இராவணனுக்கு. தந்தையின் அமைதி பெற்றுப் பெருஞ்சேனையுடன் வந்து இலக்குவனோடு பெருஞ் சமர் விளைவிக்கின்றான்; ஆத்திரத்துடன் சண்டையிடுகின்றான். வானரத் தலைவர்களையும் ஏனைய வீரர்களையும் நிலை கலங்கும்படி செய்துவிடுகின்றான். அநுமன், அங்கதன், நீலன் முதலியவர்கள்கூடச் சோர்வு அடைந்துவிடுகின்றனர்; அவ்வளவு ஆங்காரத்துடன் பெரும் போர் புரிகின்றான். இலக்குவனுக்கும் அவனுக்கும் பலத்த போர் நடக்கின்றது. இலக்குவனும் அநுமன்மீது ஏறிக்கொண்டு அருஞ்சமர் விளைவிக்கின்றான். இரவு வருகின்றது. இந்திரசித்து வானத்தில் மறைந்துவிடுகின்றான். இந்திரசித்து போய்விட்டான் என்று

---

5. நாகபாசப்—7

போரொழிந்து இளைப்பாறிக் கொண்டிருக்கும்போது, விண்ணிலிருந்து அவன் விடுத்த நாகபாசம் அனைவரையும் பிணித்து விடுகின்றது; இலக்குவனும் கட்டப்பெறுகின்றான். இராமனே நேரில் இந்நிகழ்ச்சிகளைத் தன் கண்களால் காண்கின்றான்.

மற்றொரு சமயம் இலக்குவனுடன் கடும் போர் புரிந்து இந்திரசித்து மறையவன் படையை ஏவிவிடுகின்றான். அத்திரத்தின் வேகம் தாங்காது அநுமன் சோர்ந்து விழு கின்றான்; சுக்கிரீவன் தரையில் விழுகின்றான். அங்கதனும் சாம்பவானும் நெடுநிலத்தில் சாய்கின்றனர். நளன், மயிந்தன், துமிந்தன், கவயன் முதலிய வானரத் தலைவர்கள் யாவரும் மாண்டு போகின்றனர். வானரங் களும் இவ்வாறு ஆகின்றன. இலக்குவனும் வலிய யானை யொன்று படுக்கையிடத்தில் அடங்கியதுபோல உணர்வு ஒடுங்கிக் கிடக்கின்றான். இக்காட்சியையும் இராமன் நேரில் காண்கின்றான்.

இவ்வாறு யாவருக்குமே சிம்ம சொப்பனமாய் இருந்து வந்த இந்திரசித்து அநுமன் முன்னதாக மாயா சீதையை வெட்டி வீழ்த்திவிட்டு, அயோத்திமீது சென்று அங்குள்ளவரைக் கொல்லப்போவதாகப் போக்குக் காட்டி விட்டு, நிகும்பலை யாகத்துக்குப் போகின்றான். நிகும்பலை யாகம் வெற்றியுடன் முடிந்தால்தான் இராம இலட்சுமணர் களை எளிதில் வெல்லமுடியும் என்று எண்ணியே இவ்வாறு செய்கின்றான். இதை வீடணன் மூலம் இராமன் அறிந்து, இலக்குவனையும் யாகத்தைச் சிதைத்து வருமாறு அனுப்பு கின்றான்.

'எண்ணுயிரம் கோடி இராவணரும்
வீண்ணுடரும் வேறுல கத்தெவரும்
நண்ணு ஒரு மூவரும் நண்ணிடினும்'[6]
[நண்ணு-கிட்டுதற்கு அரிய]

---

6. அதிகாயன்வதை-78

இலக்குவன்முன் நிற்கமுடியாது என்பதை இராமன் அறிந்துதான் நிகும்பலை வேள்வியை அழித்து இந்திரசித்தை யும் கொன்று வரும்படி அவனை அனுப்புகின்றான். இலக்கு வனின் அம்பால் அதிகாயன் மாண்ட அன்றே வீடணனும் இலக்குவனுடைய வில்லாற்றலைக் கண்டு மெச்சி,

'மந்திர சித்தி யன்ன
சிலைத்தொழில் வலியீ தாயின்
இந்திர சித்தி ஞர்க்கும்
இறுதியே இயைவது என்று' [7]

எண்ணுவதில் வியப்பு ஒன்றும் இல்லை. இலக்குவன் செல்லு வதற்குமுன் ஒவ்வொரு கணையையும் எவ்வெவ்வாறு ஏற்ற சமயங்களில் பிரயோகிக்கவேண்டும் என்பன போன்ற விவரங்களைச் சொல்லியனுப்புகின்றான் இராமன்.

இலக்குவன் தான் புறப்படுவதற்கு முன்னதாகக் கண்ணீர்த்துளிகளுடன் வருந்திநின்ற இராமனை வலஞ் செய்து வணங்கி வஞ்சனுசிய இந்திரசித்தின் தலையை அன்று கொண்டுவருவதாகச் சபதம் செய்து மிகக் கோபத்துடன் செல்கின்றான்.

'தான்பிரி கின்றி லாத
தம்பிவெம் கடுப்பிற் செல்லா
ஊன்பிரி கின்றி லாத
உயிரென' [8]

[வெம் கடுப்பு-மிக்க கோபம்; செல்லா-சென்று]

மறைந்தவுடன், வேள்வி காத்தற்பொருட்டு விசுவாமித் திரருடன் தன்னை அனுப்பியபோது தான் மறையக் கண்ட தசரதன் நிலையை அடைகின்றான் இராமன். சிவபூசை யில் கரடி புகுந்தாற்போல, நிகும்பலையாகத்தை வானரப் படை சிதைத்து விடுகின்றது.

---

7. அகதிகாயன் வதை-208
8. நிகும்பலை.61

'மானமும் பாழ்பட வகுத்த வேள்வியின்
மோனமும் பாழ்பட முடிவி லாமுரண்
சேனையும் பாழ்படச் சிறந்த மந்திரத்து
ஏனையும்' [9]

பாழ்பட்டு விடுகின்றன. வேள்வி சிதைந்தது தனக்கு அன்று வெற்றியில்லை என்பதற்கு அறிகுறியாக இருந்தாலும் மனத்தைத் திடப்படுத்திக்கொண்டு போருக்குப் புறப்படுகின்றான் இந்திரசித்து. தன்னிடமுள்ள சகல வித அத்திரங்களையெல்லாம் தொடுத்து அன்று போர் செய்கின்றான். அவையனைத்தையும் இலக்குவன் ஏற்றவாறு சிதைத்துவிடுகின்றான். ஒரு சமயத்தில் திடீரென்று இந்திரசித்து மறைந்துவிடுகின்றான். இராவணனிடம் சென்று நிகும்பலை யாகம் சிதைந்தமையையும், இலக்குவனுடைய பராக்கிரமத்தையும் கூறிச், 'சீதையைவிட்டுவிடுவதேசெய்யத்தக்கது' என்று உரைக்கின்றான். அதற்கு இராவணன்,

'முன்னையோர் இறந்தோர் எல்லாம்
இப்பகை முடிப்பர் என்றும்
பின்னையோர் நின்றோர் எல்லாம்
வென்றவர்ப் பெயர்வர் என்றும்
உன்னைநீ அவரை வென்று
தருதியென் (று) உணர்ந்தும் அன்றால்
என்னையே நோக்கி யான்இந்
நெடும்பகை தேடிக் கொண்டேன்' [10]

என்ற கூறி, உயிர் போனாலும் சீதையை விட முடியாது என்று பிடிவாதமாக இருக்கின்றான். உடனே இந்திரசித்து தன் தந்தையின் அடிகளை வணங்கி மீண்டும் போருக்கு வருகின்றான். தனது முழு வலியைக்கொண்டு போர்

9. நிகும்பலை-61
10. இந்திரசித்து வதை-8

புரிகின்றான். இளையபெருமாளும் அவனது ஆற்றலை வியக்கின்றான். சுத்தவீரனான ஓர் இந்திரசித்தைச் சுத்த வீரனான ஓர் இலக்குவன்தானே மதிப்பிடமுடியும்?

பலவிதமான மாயப்போர் புரிந்த இந்திரசித்தன் கரத்தை அறுத்து வீழ்த்துகின்றான் இலக்குவன். இறுதியில் இராமன் சிறந்த அறக்கடவுள் என்பது உண்மையானால் 'இவனைக் கொல்லக் கடவாய்!' என்று பிறையம்பொன்றை மந்திரித்து விடுகின்றான். அந்த அம்பு,

'நேமியும் குலிச வேலும்
நெற்றியின் நெருப்புக் கண்ணன்
நாமவேல் தானும் மற்றை
நான்முகன் படையும் நாணச்' [11]

[நேமி-திருமாலின் சக்கரம்; குலிசம்-இந்திரனுடைய வச்சிராயுதம்; நாம வேல்-நான்முகன் படை-பிரம்மாத்திரம்]

சென்று இந்திரசித்தினுடைய தலையை அறுத்து வீழ்த்துகின்றது. அரக்கர் சேனை கலைந்து ஓடுகின்றது.

இந்திரசித்தின் தலையை அங்கதன் எடுத்துக்கொள்ள அனைவரும் இராமன் இருக்குமிடத்தை நோக்கி வருகின்றனர். அங்கதன் அரக்கன் தலையை எடுத்து வருதலைக் கண்டு எல்லோருமே களிப்படைகின்றனர். இனிமேல் நல்லவர்கள் தலையெடுக்க முடியும் என்று வானவரும் மண்ணவரும் எண்ணி மகிழ்கின்றனர். இலக்குவன் அரக்கன் தலையைப் பாதகாணிக்கையாக வைத்து இராமனை வணங்குகின்றான்.

இராமனுக்கு ஒரே வியப்பு; எல்லையற்ற மகிழ்ச்சியடைகின்றான்; அரக்கன் தலையினை நோக்குகின்றான்,

11. ஷை-52

வெற்றித் திருமகள் தழுவிய தம்பியின் பொற்றோளாகிய மலையினை நோக்குகின்றான்; காற்றின் மைந்தனாகிய அநுமனுடைய வலியை எண்ணிப்பார்க்கின்றான்: தம்பியின் வில் வலியைச் சிந்தித்துப் பார்க்கின்றான். இப்படியெல்லாம் எண்ணி எண்ணி மகிழும் இராமன்,

'கம்ப மதத்துக் களியானைக்
காவற் சனகன் பெற்றெடுத்த
கொம்பும் என்பால் இனிவந்து
குறுகி னாள் என்(று) அகம் குளிர்ந்தேன்;
வம்பு செறிந்த மலர்க்கோயில்
மறையோன் படைத்த மாநிலத்தில்
தம்பி புடையான் பகையஞ்சான்
என்னும் மாற்றம் தந்தனையால்;[12]

[கம்ப மதம்-கட்டுத் தறி; களியானை-மதயானை; வம்பு-மணம்; மலர்க் கோயில் மறையோன்-தாமரை மலரை வாழிடமாகக் கொண்ட நான்முகன்; மாற்றம்-சொல்]

என்று இலக்குமணனைப் பாரட்டுகின்றான்.

இதுகாறும் சீதையின் பொருட்டே இவ்வளவு தூரம் போரிட வேண்டியிருந்த இராமன் இலக்குவணனைப் பார்த்து, 'தம்பீ, இன்றே சனகன் பெற்றெடுத்த கொம்பு போன்ற சீதை என்னை அடைந்துவிட்டாள் என்ற எண்ணத்தால் என் உள்ளமெல்லாம் குளிர்ந்துவிட்டது. தாமரை மலரை வாழ்விடமாகக்கொண்ட நான்முகன் உண்டாக்கின இவ்வுலகத்தில் தம்பியை உடையவன் எந்தவிதமான பகைக்கும் அஞ்சவேண்டியதில்லை என்ற பலமொழிக்கு நீயே சான்றாக நிற்கின்றாய்'' என்று புகழ்கின்றான். இராவணனுக்கு எல்லா விதங்களிலும் வலக்கை போன்றிருந்த இந்திரசித்து இறந்து பட்டதால், இராவணனும் அழிந்து

12. ஷை-69

படுவது உறுதி என்ற எண்ணமும் இராமனிடம் தோன்றி விடுகின்றது.

எல்லா விதத்திலும் சாமர்த்தியமுடைய இத்தம்பி இராமன் கானுள வந்தபோது அவனைக் காப்பதற்காக வந்தது இராமனது நற்பேறு என்றுதான் சொல்லவேண்டும், இதுமட்டுமா? ஒரே தாய்வயிற்றில் இராம இலட்சுமணர்கள் பிறக்காவிட்டாலும் சிறுவயது முதற்கொண்டே விடாது பொருந்திய நூல் இழைபோல ஒருவரை விட்டு ஒருவர் பிரியாது இருந்து வந்தனர். இதை நன்கு அறிந்த தசரதன் தருவனத்துள் தான் இயற்றும் தவ வேள்வியைக் காப்பதற்கு 'நின் சிறுவர் நால்வரினும், கரிய செம்மல் ஒருவனைத் தந்திடு' என்று விசுவாமித்திர முனிவர் கேட்டபோதுகூட இராமனுடன் இலக்குவனையும் சேர்த்தே தருகின்றான். இலக்குவனை ஈன்ற சுபத்திரா தேவியும் மகா உத்தமி; தருமதேவதை போன்றவள். இராமனுடன் 'நீயும் காட்டிற்குச் செல்க' என்ற உத்தரவை அவள் வாயினின்று இலக்குவன் எதிர்பார்த்த போது அவளும்,

'ஆகாத (து) அன்(று) ஆல் உனக்(கு); அவ்வனம்
இவ்வ யோத்தி
மாகாதல் இராமன் அம் மன்னவன்
வையம் ஈந்தும்
போகா உயிர்த்தாயர்நம் பூங்குழல்,
சீதை;' என்றே [13]

நினைத்துக்கொண்டு காட்டிற்குச் செல்க; இங்கு இனிமேல் நிற்றல்கூட குற்றம் என்று சொல்லி அனுப்புகின்றாள். அத்துடன் விட்டாளா? பின்னும் கூறுகின்றாள்:

---

13. நகர் நீங்கு-151

'மகனே இவன் பின்செல்; தம்பி
என்னும் படியன்று; அடியாரினில் ஏவல் செய்தி;
மன்னும் நகர்க்கே இவன் வந்திடில் வாஅ தன்றேல்
முன்னம் முடி என்றனள்.'[14]

'இலட்சுமணா, நீ இராமன் பின்தான் செல்லவேண்டும்; செல்லும்போது உன்னைப் பார்ப்பவர்கள் யாவரும் இராமனுடைய தம்பி என்று எண்ணாது, அவனுடைய அடிமை என்று எண்ணும்படி நீ நடந்துகொள்ள வேண்டும். இராமன் இந்த அயோத்தி நகருக்கு மீண்டும் திரும்பி வந்தால் நீயும் வா. அப்படியல்லாமல் மாறாக ஏதேனும் நடைபெற நேர்ந்தால், வரும் ஆபத்தில் நீ முன்னதாக உயிரைவிடு' என்றல்லவோ கூறியனுப்புகின்றாள்? இத்தகைய தியாக உள்ளம் படைத்த தாய்மார்கள் அல்லவா இன்று நமது நாட்டிற்குத் தேவை.

சிற்றன்னை தான் இராமனைக் காட்டிற்குப் போகுமாறு செய்தாள் என்ற செய்தியைக் கேட்டவுடனே இலக்குவன் மூட்டாத காலக்கடைத் தீ எனக் கோபம் கொள்கின்றான். போர்க்கோலத்தணிகித் தனுவேந்தித் தெருவில் நின்று கொண்டு 'யானே இராமனுக்கு மௌலி கவிக்கப் போகின்றேன். தடுப்பவர் வந்து தடுக்கட்டும்' என்று போர் முழக்கமும் புரிகின்றான். இங்ஙனம் காற்று தாக்க நிமிர்ந்து புகைந்து கனன்று பொங்கும் ஊழிக்கனல் போன்ற இலக்குவனிடம் அஞ்சன மேகம் போன்ற இராமன் 'பொறு பொறு' என்று மாறாத் தனிச்சொல் துளிமாரி வழங்கிக் கொண்டு வருகின்றான். எல்லாம் விதிவழிதான் நடைபெறும் என்று அவனுக்கு எடுத்துக்கூறி, 'உன் விருப்பத்திற்கு மாறாக நடப்பவர் பெற்ற தாயும் தந்தையும் ஆவர் என்றால் நீ கோபிப்பது சரியன்று' என்று எடுத்துக்காட்டுகின்றான். அன்பும் கோபமும் கலந்து நிறைந்து ததும்பும் நிலையிலுள்ள இலக்குவன்,

14. நகர் நீங்கு-152

'நல்தா தையும் நீ; தனிநாயகன் நீ; வயிற்றில்
பெற்ருயும் நீயே; பிறர் இல்லை;' [15]

என்று சிறப்பும்மையுடனும் தேற்றேகாரத்துடனும் பதில் கூறுகின்ருன். இராமன்தான் தனக்குத் தாயும் தந்தையும் தலைவனும் என்று சொல்கின்ருன். தன் அண்ணனிடம் அவன் கொண்டுள்ள அன்பு இங்ஙனம் பீறிட்டுக் கொண்டு வெளிப்படுகின்றது.

இங்ஙனம், அன்பும் பக்தியும் சாமர்த்தியமும் தியாக உள்ளமும் உடைய இலக்குவனைத் தம்பியாகப் பெற்ற இராமன் எதற்காகப் பகைக்கு அஞ்ச வேண்டும்? 'தம்பி உடையான் பகைக்கு அஞ்சான்' என்ற பழமொழிக்கு இலக்குவன் அல்லவா இன்றளவும் இலக்காக நிற்கின்ருன்? இவ்வுலகம் அழியும்வரை அவன்தானே சான்ருக நின்று ஏனைய தம்பிமார்களுக்கு வழிகாட்டப் போகின்ருன்? காவியத் தம்பிதானே மக்கள் கூட்டத்தில் காணும் ஏனைத் தம்பியருக்கெல்லாம் வழி காட்டவேண்டும்?

15. நகர் நீங்கு-137

# 3. அறங்கடந்தவர் செயல்*

இராமாயணக் கதையை அறியாத தமிழ்மக்கள் இரார் என்றே சொல்லிவிடலாம். சங்ககாலத்திற்கு முன் பிருந்தே இக்கதை தமிழ்நாட்டில் வழங்கி வருகின்றது. 12-ஆம் நூற்றாண்டில்தான் இக்கதை தமிழில் காவிய உருவத்தில் அமைந்தது என்றாலும், அதற்கு முன்னர் இக் கதையில் பல நிகழ்ச்சிகளைப் பல சந்தர்ப்பங்களில் பலர் கையாண்டிருக்கிறனர். அகநானூறு என்ற தொகை நூலி லுள்ள ஒரு பாடலில் இராமாயணக் கதையிலுள்ள ஒரு நிகழ்ச்சி உவமையாக எடுத்தாளப்பட்டிருப்பது இதற்கு ஒரு சான்றாகும்.

களவு ஒழுக்கத்தில் ஒழுகிவரும் காதலர்கள் திருமணம் செய்து கொண்டபிறகு அவர்களைப்பற்றி ஊரில் எழுந்த அலர் அடங்கிவிடுகின்றது. இதனை விளக்குவதற்கு வரும் உவமை இராமாயணக் கதையைப்பற்றியது. இராமன் சீதையை மீட்கும் பொருட்டு இலங்கைக்குச் செல்லும் போது தனக்குத் துணையாக வந்த சுக்கிரீவன், அநுமன் முதலியோருடன் ஓர் ஆலமரத்தின் அடியில் தங்கி அரிய வேதங்களை ஆராய்ந்து கொண்டிருந்தானும். அப்போது

* ஜனநாயகம் (ஜனவரி 1956) இதழில் வெளிவந்தது.

அம்மரத்தின்மீதிருந்த பறவைக் கூட்டங்கள் ஒலித்து அவருக்குத் தொந்தரவைக் கொடுத்தனவாம். இராமன் தனது ஆணையால் அவ்வொலியை அடக்கிவிட்டானும். அதுபோலவே காதலர்களைப்பற்றிய ஊராரது 'தூற்றல் பேச்சும்' அடங்கிவிட்டது என்று அப்பாடலில் வருகின்றது.

வெல்போர் இராமன் அருமறைக் கவிந்த
பல்வீல் ஆலம் போல
ஒலியவிந் தன்றுஇவ் அழுங்கல் ஊரே.[1]

[மறை-வேதம்; பல் ஆலம்-ஆலமரம்; அவிந்தன்று—அடங்கியது போல]

என்ற பாட்டின் பகுதி மேற்குறித்த நிகழ்ச்சியைத் தெரிவிக்கின்றது.

இராமாயணக் கதையில் வரும் பாத்திரங்கள் பல உண்மைப் பொருள்களை விளக்குவனவாக உள்ளன. அவ்வுண்மைப் பொருள்கள் யாவும் நமது அன்றாட வாழ்க்கைக்குப் பயன்படுபவைகளாகவே அமைந்திருப்பது யோசித்துப் பார்ப்பவர்களுக்கு எளிதில் புலனாகும். இராமனது வரலாறு ஒரு போக்கில் நமக்குப் பாடம் புகட்டுவது போலவே இராவணனுடைய வரலாறும் மற்றொரு போக்கில் நமக்குப் படிப்பினையாக அமைகின்றது. இராமன் கதை உடன் பாட்டில் பாடம் புகட்ட, இராவணன் கதை எதிர்மறையில் அதனைப் புகட்டுகின்றது.

இராவணன் தோள் பலத்தாலும் வர பலத்தாலும் புகழ்பெற்றவன். குலத்தைப்பற்றிப் பெருமை கொள்ளுபவர்களுக்கு இராவணன் சிறந்தவனாக விளங்குவான்; நான்முகனுக்குக் கொள்ளுப்பேரனல்லவா? கல்விக்கடலின் கரையைக் கண்டறிந்தவன் என்று சொன்னாலும் அவன் விடயத்தில் பொருந்தும், வேதங்களையும் சாத்திரங்களையும்

1. அகம்-70

நன்ருகக் கற்றிருந்தான். அவன் ஓதி உணராத கல்வித் துறைகளே இல்லையென்றுகூடச் சொல்லிவிடலாம்.

புயபலமும் வரபலமும் மிக்க பல சேனுவீரர்கள் அவனுக்குக்கீழ் இருக்கின்றனர். அவர்களுள் அகம்பன், நிகும்பன், மகோதரன் முதலியோர் குறிப்பிடத்தக்கவர்கள். ஐராவதத்தின் நான்கு தந்தங்களையும் பிடுங்கிக் கொண்டு பொன்மயமான பெரிய மலையொன்று திரிவது போலத் திரிந்த கும்பகருணனைத் தம்பியாகப் பெற்றிருக்கின்ருன். மகாவீரனுன இந்திரசித்து, வீரத்தில் அவனுக்குச் சமமான அதிகாயன் ஆகியவர்களை மக்களாகப் பெற்றிருக்கின்ருன்.

இத்தகைய துணைவரின் பலத்தையுடைய இராவணன்,

தனயன் நான்முகன் தகைமகன்
சிறுவதற்குத் தவத்தால்
முனைவர் கோன்வரம் முக்கணன்
வரத்தொடும் உயர்ந்தான்[2]

[தனயன்-மகன்; நான்முகன் தகைமகன்-பிரம்மாவினுடைய நற்குணம் மிக்க குமாரன்; இவன் புலத்தியப் பிரம்மா; முனைவர் கோன்-அந்தணர் தலைவன் பிரம்மா; முக்கணன்-சிவபெருமான்]

அரிய தவம்புரிந்து நான்முகனிடத்திலும் சிவபெருமானிடத்திலும் பல வரங்களைப் பெற்றவன்.

திக்குவிசயம் செய்தபோது கைலாய மலையையே வேருடன் வாங்கிப் பக்கத்தில் எறிந்துவிட்டுத் தேரினை நேராகச் செலுத்திச் செல்ல முயன்றவன் என்ருல் அவன் புயவலி எளிதானதா?

---

2. இலங்கை கேள்வி-52

எள்ளில் ஐம்பெரும் பூதமும் யாவையும் உடைய
புள்ளி மான்உரி ஆடையன் உமையொடும் புணர்த்த
வெள்ளி யம்பெருத் தடங்கிரி வேரொடும் வாங்கி
அள்ளி விண்தொட எடுத்தனன் உலகெலாம் அனுங்க.[3]

[எள்இல்-இழிவாகப் பேசப்படாத; புள்ளிமான் உரிஆடையன்-சிவபெருமான்; உமை-பார்வதி வெள்ளியம் பெருந்தடங்கரி - கைலாயமலை; அனுங்க-வருந்த]

அதுமட்டுமா? எட்டுத் திக்குகளிலும் உள்ள யானைகளை எதிர்த்தபோது அவற்றின் தந்தங்கள் தனது புயங்களில் முறிந்து அவற்றிற்கு அழகுசெய்து நிற்பதைக் காணும் போதே தேவர்கள் நிலைகலங்கி ஓடுகின்றனர். காலக் கேயரைத் தனது வாளினால் கொன்று வெற்றிபெற்ற இராவணனுடைய பெயரைக் கேட்டாலும்போதும்; வானவரின் மனைவிமாருடைய கருப்பம் கலங்கிவிடும். தனது தமையனை குபேரனையும் போரில் வென்று அவனு டைய புட்பக விமானத்தைக் கைபற்றிக் கொண்டவன்.

குரண்டம் ஆடும்நீர் அளகையின் ஒளித்துறை குபேரன்
திரண்ட மாடும்தன் திருவொடு நிதியமும் இழந்து
புரண்டு மான்திரள் புலிகண்ட தாமெனப் போனன்
இரண்டு மானமும் இலங்கைமா நகரமும் இழந்து.[4]

[குரண்டம்-ஒருவித பறவை; அளகை-அளகாபுரி; குபேரனுடைய தலைநகரம்; உறை-வசிக்கும்; மாடு - செல்வம்; திரு - இராச்சியலட்சுமி; நிதியம்-நவநிதிகள்; மான்திரள்-மான்கூட்டம்; இரண்டுமானம் - ஒன்று பெருமை எனப் பொருள்படும் மானம், மற்றொன்று புட்பக விமானம்.]

---

3. இலங்கை கேள்வி-53
4. ஷை -53

மான்கூட்டம் புலியைக் கண்டு பயந்ததைப்போல குபேரன் இவனைக்கண்டு பயந்து தனது செல்வம், நவ நிதிகள் மானம், விமானம் ஆகியவற்றையெல்லாம் இழந்து விடுகின்றான். எல்லா உயிர்களையும் கவரும் யமன்கூட அவனைச் சிம்மசொப்பனமாகக் கருதிப் பயந்து, தன் உயிரைக்குறித்து எண்ணமிட்டுக் கொண்டிருக்கின்றான். இன்னும் அவனுடைய ஊராகிய இலங்கையைச் சூரியன் மட்டு மல்ல, அவன் சாரதியாகிய அருணன்கூட கண் எடுத்துப் பார்க்க அஞ்சுகின்றான். வருணனும அவனுடன் சமர்புரிந்து தனது பாசப்படையை இழந்து கடலில் ஒளிந்து கொண்டு விடுகின்றான்.

இத்தகைய பேராற்றலையுடைய இராவணனுக்குத் தேவர்களும் திரிமூர்த்திகளும் அடங்கி அவன் இட்ட வேலைகளைச் செய்து வருகின்றனர். அநுமன் அசோக வனத்தில் மறைந்து கொண்டு நிகழ்ச்சிகளைக் கவனிக்கும் போது, பலவித விருதுகளுடன் இராவணன் சீதையிருக்கும் இடத்திற்கு வருவதைக் காண்கின்றான். இராவணன் வரும்போது அவனுக்கு முன்னால் ஊர்வசி அவனது உடை வாளை ஏந்தி வருகின்றாள்; மேனகை வெற்றிலை மடித்துத் தந்துகொண்டே வருகின்றாள்; திலோத்தமைசெருப்பினைத் தாங்கிக் கொண்டு வருகின்றாள். ஏனைய தேவமாதர்கள் அவனைச் சூழ்ந்து வந்து கொண்டிருக்கின்றனர். எட்டுக் கோடி மகளிர் புழுகுத் தைலம் விட்டு ஏற்றிய விளக்கு களைத் தாங்கிக்கொண்டு வருகின்றனர். இம்மகளிரின் உடலில் உயர்ந்து தோன்றும் இரத்தினாபரணங்கள் இருளை யெல்லாம் விலக்கி விடுகின்றன. இக்கட்டத்தில் இராவண னது பல்வகைச் சிறப்புகளையும் கம்பன் மிக விரிவாகக் காட்டுகின்றான்.

அசோகவனத்தை அழித்த அநுமனை இந்திரசித்து நாகபாசத்தால் கட்டி இராவணனின் அரண்மனைக்குக் கொண்டுவரும்போது இராவணன் கொலுவீற்றிருந்த வைபவத்தை நமக்கு அறிவிக்கும் மூலமாக இராவணனது

பல்வகைச் சிறப்புக்களையும் காட்டுகின்றான் கம்பன். முத்துச் சரங்கள் தொங்கப்பெற்ற வெண்கொற்றக் கொடை மூன்று உலகங்களுக்கும் விளக்கம் தரும் சந்திர மண்டலம்போல் காட்சியளிக்கின்றது. அதன்கீழ்க் கைலாய மலைபோல் இராவணன் வீற்றிருக்கின்றான். தேவர்களுடனும் மூவர்களுடனும் போர் புரிந்ததனாலான தழும்புகள் அவனது இருபது தோள்களையும் மார்பையும் அலங்கரித்து நிற்க, பத்துத் தலைகளுடன் அவன் சிம்மாதனத்தில் வீற்றிருப்பதை அநுமன் காண்கின்றான். பல்வகை இனிமையான வாத்தியங்களுடன்,

அரம்பை மங்கையர் அமிழ்துகுத் தாலன்ன பாடல்
வரம்பில் இன்னிசை செவிதொறும் செவிதொறும் முழங்கு[5]

கின்றன. பாட்டின் இசைக்கும் மத்தளத்தின் ஒலிக்கும் ஒத்து வருமாறு, 'கைவழி நயனஞ் செல்லக் கண்வழி மனமும் செல்ல' மேனகை நடனமாடிக் கொண்டிருக்கின்றாள். அவளுடைய நாட்டியத்தை அருமையான தவங்களைச் செய்த முனிவர்கள் பார்க்க நேர்ந்தாலும் தமது முக்தியின்பத்தையும் கைவிட்டு அவள்மீது தம் மனத்தைத் திருப்பி விடுவார்களாம். அவளது இயற்கை யழகும் நாட்டிய அழகும் அவர்களது கண்ணையும் கருத்தையும் ஒருங்கு கவர்ந்து விடுமாம். இதனைக் கம்பன்,

ஆடல் நோக்குறின் அருந்தவ முனிவர்க்கும் அமைந்த
வீடு மீட்குறும் மேனகை[6]

என்று நமக்குக் காட்டுகின்றான். திருச்செந்தூரில் எழுந்தருளியிருக்கும் முருகக் கடவுளின் ஆறுமுகங்களின் செயல்களை நக்கீரர் திருமுருகாற்றுப்படையில் காட்டுவதுபோல இராவணது பத்து முகங்களும் எவ்வெத் தொழில்களைச்

---

5. பிணிவீட்டு-47
6. ௸ -48

செய்து கொண்டிருக்கின்றன என்பதைக் கம்பன் காட்டுகின்றான்.

இராவணனுடன் பிணங்கிய மகளிரின் முகத்தில் துளிர்க்கும் இன்பச் சுவையாகிய தேனை ஒரு முகம் நுகர்கின்றது; அவனுடன் கூடின பெண்களின் முகத்தில் தோன்றும் களிப்பாகிய மதுவினை ஒருமுகம் பானம் செய்கின்றது. தன்னிடத்து வேட்கையுடன் இசை பாடிய மகளிரின் முகத்தில் தோன்றும் காதற்குரிய நங்கையரின் முகத்தில் தோன்றும் அபிநய ரசத்தை ஒருமுகம் அருந்துகின்றது. ஒருமுகம் தன்கீழ்வாழும் தேவர்களாகிய குடிகளுடன் அளவளாவி அரசாட்சி நடத்துகின்றது. ஒரு முகம் மந்திரி, பிரதானிகள், சேனுதிபதிகள் ஆகிய மூவருடன் கலந்து ஆலோசனை செய்கின்றது. ஒருமுகம் தீய சிந்தனைகளின் குறிப்பை வெளியிட்டுக் கொண்டிருக்கின்றது. ஒருமுகம் மாதர்கள் கையிற் காட்டுகின்ற கண்ணுடியில் தன் அழகைக் காண்கின்றது, கடைசி இரண்டு முகங்களும் அவனுக்கு அழிவைத் தரக்கூடிய காரியங்களில் ஈடுபட்டிருக்கின்றன.

**பூவை சானகி உருவொடு ஒருமுகம் பொருந்திக்**[7]

கொண்டிருக்கின்றது. அதுமட்டுமா?

**காந்தன் மெல்விரல் சனகிதன் கற்பெனும் கடலை**
**நீந்தி ஏறுவ(து) எங்ஙனென்(று) ஒருமுகம் நினை**[8]

ந்து கொண்டிருக்கின்றது. இவ்வாறு வீற்றிருக்கும் இராவணனை மாருதி காண்கின்றான்.

இலங்கையில் முதல்நாள் போர் தொடங்குகின்றது. இலங்கையின் மதிலைச் சூழ்ந்து கொண்டு வானரவீரர்கள் போர் தொடங்குகின்றனர். இலங்கையின் நான்கு வாயில்

---

7. ௸-50
8. ௸-51

களிலும் இராக்கதசேனை புறப்பட்டு வருகின்றது. நால் வகைச் சேனைகளையும் சுக்கிரீவன் ஒருவனே எதிர்த்து நிற்கின்றான். வச்சிரமுஷ்டிக்கும் சுக்கிரீவனுக்கும் நடந்தபோரில் வச்சிரமுஷ்டி வானுலகம் சேர்கின்றான். கும்பானுவை இடும்பன் கொல்கின்றான்; பிரகஸ்தன் உயிரை நளன் செகுத்து விடுகின்றான். சுபாரிசன் ஆவியை அங்கதன் போக்குகின்றான். அநுமன் துன்முகன் உயிரைக் குடிக்கின்றான். இச்செய்திகளையெல்லாம் ஒற்றர்களால் அறிந்த இராவணன் தானே நேராகப் போர்க்களத்துக்கு வருகின்றான் கரிய கடல் போன்ற சேனையுடன். இதனைத் தூதுவர்மூலம் இராமன் அறிகின்றான். இராவணன், அநுமான் இலக்குவன் ஆகியவர்களுடன் போர் செய்த பிறகு இராமனுக்கும் இராவணனுக்கும் கடும் போர் நடைபெறுகின்றது. இராமன் அநுமன் தோளில் அமர்ந்து கொண்டுப் பெரும்போர் புரிகின்றான்.

எண்ணரும்பெரும் தனிவலிச் சிலையைநாண் எறிந்தான்;
மண்ணும் வானமும் மற்றைய பிறவுந்தன் வாய்ப்பெய்து
உண்ணும் காலத்(து) அவ் உருத்திரன் ஆர்ப்பொத்த(து) ஓதை[9]

[சிலை - வில்; வாய்ப்பெய்து - வாயில் போட்டு;
ஆர்ப்பு - ஆரவாரம்; ஓதை - ஓசை]

எண்ணுதற்கரிய ஒப்பற்ற வில்லின் நாணொலியை இராமன் எழுப்புகின்றான். அந்த நாணொலியின் ஓசை ஊழிக் காலத்தில் இவ்வுலகங்களனைத்தையும் தன் வாயில் போட்டுக்கொண்டு உண்ணும் உருத்திரமூர்த்தியின் ஆரவாரத்தை ஒத்திருக்கின்றது.

இராம—இராவணப்போர் மிக மும்முரமாக நடைபெறுகின்றது. அரக்கர்கள் ஏராளமாக மடிகின்றனர். ஒரு சமயத்தில் இராவணனைத் தவிர அனைவருமே மடிந்து

9. முதற்போரி புரி-225

விடுகின்றனர். இதனைக் கண்ட இராவணன் வெகுண்டு அம் பெய்கின்றனர். இராமன் இராவணனுடைய வில்லைத் துண்டித்து, அவன் எடுத்த வேறொரு வில்லினையும் அறுத் தெறிந்து தேர்க்குதிரைகளையும் தலையறுக்கின்றான்; வரிசை யாக வந்து கொண்டிருக்கும் சேமத் தேர்களையெல்லாம் அழித்துவிடுகின்றான். இறுதியில் ஒருகணையால் இராவண னது பொன்மணிக் கிரீடத்தை வீழ்த்தி அவனையும் மகுட பங்கம் செய்து விடுகின்றான்.

இது காறும் போரில் தோல்வியையே காணாத இராவ ணனுக்குத் தோல்வி ஏற்படுகின்றது. மணிமுடியை இழந்த இராவணன், சந்திரனையும் சூரியனையும் இழந்த இரவையும் பகலையும் ஒத்துக் காணப்படுகின்றான். எல்லா உலகத்திலும் உயர்ந்தவன் என்றாலும்,

> ஆற்றல் நன்னெடும் கவிஞன்ஓர் அங்கதம் உரைப்பப்
> போற்று அரும்புகழ் இழந்தபேர் ஒருவனும் போன்றான்:[10]

> [ஆற்றல் நன்னெடுங்கவிஞன் - வல்லமை பெற்ற நல்ல சிறந்த கவிஞன்; அங்கதம் - வசைப் பாட்டு; பேர் ஒருவன் - பெருமை பெற்ற ஒருவன்]

மிக்க வல்லமைபெற்ற சிறந்த கவிஞன் ஒருவன் வசைப் பாட்டு பாட, அதனால் சீரும் சிறப்பும் வாய்ந்த ஒருவன் அனைத்தையும் இழந்து நிற்பது போல, இராவணன் காட்சி அளிக்கின்றான். அவன் இராமன் முன்பு நிற்கும் காட்சி யைக் கம்பன்,

> 'அறங்க டந்தவர் செயல் இது' என்(று)உலகெலம் ஆர்ப்ப,
> நிறங்க ரிந்திட நிலம்விரல் கிளைத்திட நின்றான்;
> இறங்கு கண்ணினன் எல்அழி முகத்தினன்; தலையன்;
> வெறுங்கை நாற்றினன்; விழுதுடை யாலன்ன மெய்யன்[11]

10. முதற்போர் புரி-249
11. ஷை -250

[அறம்-தருமம்; ஆர்ப்ப-ஆர்ப்பரிக்க: நிலம்விரல் கிளைத்திட- கால் விரல் நிலத்தைக் கீறிக் கொண்டிருக்க; இறங்கு-கண்ணினன் -கீழே பார்க்கும் கண்ணையுடையவனாய்; எல்-ஒளி; வெறுங்கை-ஆயுதங்களை இழந்த கை; நாற்றினன்-தொங்க விட்டிருப்பவன்; விழுது உடை ஆல்-விழுதையுடைய ஆலமரம்]

என்று காட்டுகின்றான். இராவணன் நின்ற நிலையில் அவனுடைய செருக்கெல்லாம் அழிந்து நிற்கின்றது. நேராகப் பார்க்கக்கூடக் கூசுகின்றான்; அவனது பார்வை கீழ் நோக்கியிருக்கின்றது. முகத்தில் ஒளி இல்லை; தலையிலும் மணி முடியில்லாததால் பிரகாசம் இல்லை. பெரிய ஆல மரம் ஒன்று தொங்கும் விழுதுகளுடன் காட்சியளித்தாற் போல், தனது இருபது வெறுங்கைகளைத் தொங்கவிட்டுக் கொண்டு தன் உடலை இராமன்முன் காட்டிக் கொண்டு நிற்கின்றான். மானம் இழந்த நிலையில் இயற்கையிலேயே கருமை நிறம் வாய்ந்த அவன் உடல் இன்னும் கறுத்து விடுகின்றது; மீறி நிற்கும் நாணத்தால் கால்விரல்களால் நிலத்தைக் கீறிக்கொண்டு நிற்கின்றான். 'அறநெறிப்படி நில்லாது மனம்போனபடியெல்லாம்போகும் மனிதர்களின் செயல் இப்படித் தான் முடியும்!' என்று உலகத்தவர்கள் முழக்கம் செய்து நிற்கின்றனர்.

இந்நிலையில் அவனை வெல்லுவதும் எளிது; கொல்லுவதும் எளிது. இராமன் அப்படிச் செய்கின்றானா? அதுதான் இல்லை. பின் என்ன செய்கின்றான்? இராமன் அவனது தனிமையைக் கண்டு இரக்கம் கொள்கின்றான். விரைந்து இலங்கை மாநகரிலுள்ள சுற்றத்தாருடன் போய்ச் சேரும்படிக் கூறுகின்றான். மற்றும்,

'அறத்தி னாலன்றி அமரர்க்கும் அருஞ்சமம் கடத்தல்
மறத்தி னாலரி (து) என்பது மனத்திடை வலித்தி'[12]

---

12. முதற்போர்புரி-250

[அறம-தருமம்: அமரர்-தேவர்; அருஞ்சமம்-அரிய போர்; கடத்தல்-வெல்லுதல்; மறம்-அதருமம்; வலித்தி-உறுதியாகக் கொள்வாய்]

என்று அவனுக்கு அறவுரையும் கூறுகின்றான். 'தேவர்களாக இருந்தாலும் அக்கிரமத்தால் ஒன்றையும் வெல்ல முடியாது என்பதை மனத்தில் உறுதியாகக் கொள்வாயாக!' என்றல்லவோ அறத்தின் உருவம்போன்ற இராமன் இராவணனுக்கு உபதேசம் செய்கின்றான்?

அத்துடன் நிறுத்திவிடுகின்றானா கோசலை நாட்டுடை வள்ளல்? பின்னும் கூறுகின்றான்: "இன்னும் போர்செய்ய விரும்பினால் உன்னுடன் இருக்கும் சுற்றத்தாரையும் சேனையையும் சேர்த்துக் கொண்டு நீ சேமித்து வைத்துள்ள படைபலத்துடன் போருக்கு வருவாயாக; இல்லையேல், எங்காவதுபோய் ஒளிந்து கொள்க. சிறை வைத்த செல்வியை என்முன் கொண்டு வந்து விட்டு, உன் தம்பியாகிய வீடணனைத் தேவனாக மதித்துஅவனிடம் அரசாட்சியையும் விட்டு, நீ அவனுக்கு ஏவல் செய்து கொண்டிரு. இஃது உனக்குச் சம்மதம் இல்லாவிட்டால், எதிர்த்து நில், ஐயனே!' என்று 'சொல்லி என் எதிர் நின்று ஆவி துறப்பாய். 'பிழைத்துக் கொள்ளலாம்' என்று மட்டிலும் எண்ணம் கொள்ள வேண்டாம்' என்று. இன்னும்.

'ஆளை யாவுனக் (கு) அமைந்தன மாருதம் அறைந்த
பூளை யாயின கண்டனை; இன்றுபோய்ப் போர்க்கு
நாளை வா!'[13]

[ஆள் ஐயா-அரக்கரை ஆளும் ஐயா; அமைந்தன-துணையாக அமைந்த சேனைகள்; மாருதம்-காற்று; அறைந்த-மோதப்பட்ட; பூளை-பூளைப் பூண்டுகள்]

என்று காலத்தையும் கொடுத்து வேறொரு வாய்ப்பையும்

13. ஷை-256

தருகின்றான். இவன் அல்லவா தருமமூர்த்தி? இவ்வாறு எதிரிக்குத் துன்பம் வந்தபோதும் அதனைத் தனது வாழ்வுக்குத் துணையாகக் கொள்ளாது எதிரிக்கு மீட்டும் ஒரு சந்தர்ப்பத்தைத் தருவதல்லவாபேராண்மை?

இத்தகைய சீரும் சிறப்பும் வாய்ந்த இராவணன், புயபலத்தாலும் வரபலத்தாலும் பெருமை வாய்ந்த இலங்கை வேந்தன், அழியக் காரணம் என்ன? சாதாரண மனிதர் இருவரையும் வானரர்களையும் எதிர்த்து நிற்க முடியாமல் போனதன் காரணம்தான் என்ன? பாரக்கிரமங்களைப் பல படைத்திருந்தும் காமம் ஒன்று நெஞ்சிலுள் நுழைந்து அவைகளையெல்லாம் தேய்த்து விடுகின்றது. இந்தக் குற்றம் அவனிடத்தில் இல்லாதிருந்தால் அவன் எவ்வளவுமேலானவனாயிருந்திருப்பான்! எல்லா மேன்மைகளும் பொருந்திருந்தும் இந்த ஒரு குற்றம் அவனை எவ்வளவு சிறியவன் ஆக்கிவிடுகின்றது! இறுதியில் அழிவையன்றோ அவனுக்குத் தந்து விடுகின்றது? நமது ஆசையை அடக்கும்போது நாம் அமரனாகிறோம் என்றும் நாம் ஆசைக்கு உட்படும்போது அசுரன் ஆகின்றோம் என்றும் ஆன்றோர் கூறும் உண்மைக்கு இராவணதத்துவம் ஓர் எடுத்துக்காட்டாக இருக்கின்றதல்லவா? தருமவழியில் ஒழுகாவிட்டால் "இராவணன் நிலைதான் நமக்கும்!" என்ற உண்மையை சாதாரண மக்களும் அறிந்துகொள்ளும்படி இராவணன் கதை விளக்கி நிற்கின்றதன்றோ?

# 4. கம்பனில் குழந்தையின்பம்*

குழந்தை இன்பத்தைப்பற்றிப் பாடாத கவிஞர்களே இல்லை; கூறாத இலக்கியங்களே இல்லை. உலக இலக்கியங்கள் அனைத்திலும் இதன் சிறப்பு, பல படியாகப் பெருமையுடன் பேசப்படுகின்றது. அறிவு நிலை முதிர்ச்சிப் பெறாத விலங்கினங்களும் பறவையினங்களும் ஏனைய சிற்றறிவுயிர்களும் தம் வழித்தோன்றல்களுடன் கொஞ்சிக் களிக்கின்றன. மனித இனத்திலும் எல்லா நிலையிலுள்ள மக்களும் குழந்தையிடம் பேரன்பு காட்டிப் பெரு மகிழ்வு எய்துகின்றனர். குழந்தைப் பேறு இல்லாவிட்டால் அது வாழ்வில் ஒரு பெருங்குறை என்றும் கருதப் பெறுகின்றது. தமிழர்களின் வாழ்க்கைக் கலையாக மிளிரும் திருக்குறளில்,

> மங்கலம் என்ப மனைமாட்சி; மற்றதன்
> நன்கலம் நன்மக்கட் பேறு.[1]

என்று மக்கட் பேற்றைச் சிறப்பிக்கின்றார் வள்ளுவப் பெருந்தகை.

---

* தமிழ் நாடு (தீபாவளி மலர்—1956இல்) வெளிவந்தது.

1. குறள்—60

குழல்இனிது யாழ்இனிது என்பதம் மக்கள்
மழலைச்சொல் கேளா தவர்[2]

என்று குழந்தைச் செல்வத்தைப் பாராட்டிப் பேசுகின்றார். பாட்டுத்திறத்தாலே இவ்வையத்தைப் பாலித்திட்ட பாரதியாரும் 'கண்ணம்மா—என் குழந்தை' என்ற தலைப்பில் எவர்மனத்தையும் எளிதில் கொள்ளை கொள்ளக்கூடிய இன்னிசைக் கவிதையைப் பாடியுள்ளார். தமிழ்மொழில் குழந்தையின்பத்தைக் கூறும் இதற்கு ஈடான வேறு கவிதையே இல்லை என்றுகூடச் சொல்லிவிடலாம்.

கன்னத்தில் முத்தமிட்டால்—உள்ளந்தான்
கள்வெறி கொள்ளு தடீ!
உன்னைத் தழுவிடிலோ—கண்ணம்மா
உன்மத்த மாகு தடீ!
மார்பி லணிவதற்கே—உன்னைப்போல்
வைர மணிக ளுண்டோ?
சீர்பெற்று வாழ்வ தற்கே—உன்னைப்போல்
செல்வம் பிறிது முண்டோ?

என்பன போன்ற பாடற்பகுதிகள் பாடப்பாடத் தெவிட்டாத இன்பந் தருபவை.

கடவுளைப்பற்றி உருகி உருகிப் பாடிப் பிறப்பையே வேருடன் அறுக்கவேண்டும் என்று முயலும் சமயகுரவர்களும் ஆண்டவனைக் குழந்தையாகப் பாவித்துக் கொண்டு அற்புதச் சொல்லோ வியங்களை அருளியுள்ளனர். பெரியாழ்வார் கண்ணன் திருவவதாரச் சிறப்புப் பற்றிப் பாடியுள்ள பாடல்களை இவற்றிற்கு எழுத்துக்காட்டுக்களாகக் கொள்ளலாம். இவ்வாறு ஆழ்வார் மணிகள் காலத்தில் அரும்பிய பிள்ளைப்பாட்டுகளே பிற்காலத்தில் 'பிள்ளைத்தமிழ்' என்ற தனிப்பிரபந்த வகையாக வடிவெடுக்கத் துணைசெய்தன. குழந்தையின்பத்தை உச்ச

2. குறள் - 66.

நிலையில் காணக்கூடிய பருவத்தைத் தேர்ந்தெடுத்து அப்பருவத்தைப் பத்துப் பகுதிகளாகப் பிரித்துக் கொண்டு பாடும் வழக்கமும் ஏற்பட்டது.

பிள்ளைப் பாட்டே தெள்ளிதின் கிளப்பின்
மூன்று முதலா மூவேழ் அளவும்
ஆன்ற திங்களின் அறைகுவர் நிலையே[3]

என்ற இலக்கணமும் வகுக்கப்பெற்றது. திருமால் முருகன், அம்பிகை முதலிய கடவுளர்களைக் குழந்தையாக உருவகித்துப் பாடியுள்ள பிள்ளைத் தமிழ் நூல்கள் தமிழ் இலக்கியத்தின் கருவூலங்கள். காப்பியத்திலும் குழந்தை யின்பம் வெகுவாகச் சிறப்பித்துப் பேசப்படும். பெருங் காப்பியத்திற்கு இலக்கணம் கூறும் தண்டியாரும்.

தேம்பிழி மதுக்களி
சிறுவரைப் பெறுதல்.[4]

என்ற கூறினை இன்றியமையாத காப்பிய உறுப்பாகக் கூறிச் சென்றார்.

இங்ஙனம் பல்வேறு துறைகளிலும் பல்வேறு நிலையிலு முள்ள கவிஞர்களும் சிறப்பாகக் கொண்டுள்ள குழந்தை யின்பத்தைக் கம்பன் தனது காவியமாளிகையில் எங்கும் காட்டவில்லை. காட்டவேண்டிய வாய்ப்புகள் நிறைய இருந்தும் காட்டவில்லை. இராம காதையில் மனிதர் உலகம், குரக்கர் உலகம், அரக்கர் உலகம் என்ற மூன்று தனிப்பட்ட உலகங்கள் காட்டப்பெறுகின்றன. மூன்றிலும் தனித்தனிப் பேரரசுகள் ஏற்பட்டு கோலோச்சிய செய்திகள் கூறப்பெறுகின்றன. மூன்றிலும் ஆண்ட அரசர்களுக்குக் குழந்தைப் பேறு ஏற்படத்தான் செய்தது. அச்சந்தர்ப்பங்களை யொட்டிக் கம்பன் குழந்தையின்பத் தைப்பற்றிப் பல பாடல்களைப் பாடியிருந்திருக்கலாம்.

---

3. பன்னிருபட்டியல்.
4. தண்டியலங்காரம்.

இவ்வளவுகூட ஏன் யோசிக்க வேண்டும்? அரக்கர் உலகம். குரக்கர் உலகம் ஆகிய இரண்டையும் கற்பனை யுலகங்கள் என்று கொண்டாலும் மனித உலகையாவது உண்மை யான உலகம் என்று கொள்ளலாமன்றோ? மனித உலகை ஆண்ட தசரதனுக்கும் பன்னெடுங்காலமாகக் குழந்தைப் பேறு இல்லாதிருந்தது, அறுபதினாயிரம் மங்கையரை மணந்து அறுபதினாயிரம் ஆண்டுகள் அறநெறி வழுவாது செங்கோலோச்சிய மன்னனுக்குக் குழந்தைப் பேறு ஏற்பட்ட பொழுது. அந்த இன்பத்தை எத்தனையோ விதமாகக் காட்டியிருந்திருக்கலாம். இக்காலத்தில் பெரிய செல்வந்தர் வீட்டில் பல ஆண்டுகள் மக்கட்பேறு இல்லாது அவ்வீட்டு மங்கை கருவுற்றால், கருவுயிர்ப்பதற்கு முன் சில திங்களிலிருந்தே பல சிறப்பு நிகழ்ச்சிகள் நடை பெறத் தொடங்கி விடுகின்றன. குழந்தை பிறந்து ஒன்றிரண்டு ஆண்டுகள் அக்குடும்பம் மிகக் குதூகலமாக இருப்பதைக் காண்கின்றோம். குழந்தைக்கு எண்ணற்ற விளையாட்டுச் சாமான்கள், விநோதமான ஆடையணிகள் முதலியவைகள் வாங்கித் தரப்பெறுகின்றன. உறவினர் முதலியோர் வந்து வந்து போவர். இரவலர்க்கீதல் போன்ற செயல்கள் அடிக்கடி நடைபெறும்; ஏழைகளுக்கு உண்டி வழங்குதல் போன்றவை அடிக்கடி நிகழும், இன்னும் எத்தனையோ நிகழ்ச்சிகள்! தசரதனுக்குக் குழந்தைப் பேறு ஏற்பட்ட நிகழ்ச்சி மிகச் சாதரணமாகத்தான் காட்டப்பெறு கின்றது.

ஒரு பகல் உலகெலாம் உதரத் துட்பொதிந்து
அருமறைக்கு உணர்வரும் அவனை அஞ்சனக்
கருமுகிற் கொழுந்தெழில் காட்டும் சோதியைத்
திருவுறப் பயந்தனள் திறங்கொளி கோசலை.[5]

[உதாம்—வயிறு; அஞ்சனம்—மை]

என்ற பாட்டில் கோசலை இராமனைப் புரவந்த செய்தி வருகின்றது.

5. திருவவதாரம்—103

ஆசையும் விசும்புநின் றமரர் ஆர்த்தெழ
வாசவன் முதலினோர் வணங்கி வாழ்த்துறப்
பூசமும் மீனமும் பொலிய நல்கினாற்
மாசறு கேகயன் மாது மைந்தனை[6]

[ஆசை—திக்கு; கேகயன் மாது—கைகேயி.]

என்ற பாட்டு கைகேயிக்கு பரதன் பிறந்தான் என்ற செய்தியை உணர்த்துகிறது. சுமித்திரைக்கு இலக்குவனும் சத்துருக்கனும் மக்களாகப் பிறந்தனர் என்பதை,

தளையவிழ் தருவுடைச் சயில கோபனும்
கிளைநுமக் தரமிசைக் கெழுமி யார்த்தெழ
அளைபுகும் அரவினோடு அலவன் வாழ்வுற
இளையவற் பயந்தனன் இளைய மென்கொடி.

[சயிலகோபன்—இந்திரன்; அளை—புற்று]

படங்கிளர் பஃறலைப் பாந்தள் ஏந்துபார்
நடங்கிளர் தரமறை நவிவ நாடக
மடங்கலும் மகமுமே வாழ்வின் ஓங்கிட
விடங்கினர் விழியினாள் மீட்டும் ஈன்றனன்.[7]

[பாந்தன்—ஆதிசேடன்]

என்ற பாடல்கள் தெரிவிக்கின்றன. இதற்குப் பிறகு நகரமக்கள் அரசனுக்குப் பிள்ளைப் பேறு ஏற்பட்டதால் அடைந்த மகிழ்ச்சி, நால்வருக்கும் பெயரிடல், வளர்ச்சி பெறுதல், உபநயனம் நடத்தல், பல கலைகளைப் பயில்தல் போன்ற செய்திகள் ஒவ்வொரு பாடல்களில் காட்டப் பெறுகின்றன. பெற்றோர்க்கேற்பட்ட மகிழ்ச்சியையோ, குழந்தைகள் பெற்றோர்க்கும் மற்றோர்க்கும் தந்த இன்பத்தையோ கவிஞன் குறிப்பினால்கூடக் காட்டவில்லை.

---

6. திருவவ—104
7. ஷை—105, 106.

காவியம் மிகச் சுருக்கமாகப் பாடப்பெற்றிருந்தால் இத் தகைய நிகழ்ச்சிகளைக் காட்டுவதற்கு இடம் இல்லை என்று கருதலாம். காவியமோ பத்தாயிரம் பாட்டுகளுக்கு மேல் வளர்ந்து செல்லுகின்றது. அதில் இந்நிகழ்ச்சியை விரித் துரைக்க இடம் இல்லை என்று கருதுதல் தவறு. யுத்த காண்டத்தில் அளவுக்கு விஞ்சிய பாடல்களைப் பாடிய கவிஞன் தக்க சூழ்நிலையைக் கவினுறப் பயன்படுத்திக் கொள்ளாததற்கு யாதாயினும் ஒரு காரணம் இருந்திருக்க வேண்டும் என்று எண்ண வேண்டியிருக்கிறதன்றே?

குழந்தையின்பத்தைச் சிறிதும் கூறுத கவிஞன் மைந்தர்கள் இறப்பைக் குறித்துப் பாடுங்கால் உள்ளத்தை யெல்லாம் கொள்ளை கொள்ளக் கூடிய அற்புதப் பாடல் களை அள்ளி வீசுகின்றான். அட்சயகுமரன், அதிகாயன்|ஆகிய மைந்தர்கள் இறந்தபோது இராவணனுக்கு உண்டான துக்கத்தைக் கவிஞன் சாதாரணமாகத்தான் காட்டு கின்றான். அதிகாயன் இறந்தபோதுகூட இராவணன் வாய்விட்டுப் புலம்பும் நிலையைக் கவினுறக் காட்டவில்லை. மைந்தன் இழப்பைக் குறித்து இராவணன் "நகும்; அழும்: முனியும்; நாணும்" என்றும், "புண்ணிடை எரிபுக்கென்ன மானத்தாற் புழுங்கி நையும்" என்றும் மட்டிலுந்தான் கூறுகின்றான். ஆனால், அதிகாயன் இறப்பைக் குறித்து தானிய மாலினிதான் அதிகமாகப் புலம்புகின்றாள்.

இந்திரற்குந் தோலாத நன்மகனை ஈன்றாள்என்று
அந்தரத்து வாழ்வாரும் ஏத்தும் அளியத்தேன்
மந்தரத்தோள் என்மகனை மாட்டா மனிதன்றன்
உந்துசிலைப் பகழிக்கு உண்ணக் கொடுத்தேனே[9]

என்ற பாடல் அவள் புலம்பலின் உச்சநிலையைக் காட்டு கின்றது.

---

9. அதிகாயன் வதை-270

மேகநாதன் இறந்துபடும்போதுதான் துக்கத்தின் கொடுமுடிகள் எல்லாம் காட்டப்பெறுகின்றன. இராவணனின் புலம்பலிலும் மண்டோதரியின் புலம்பலிலும் இத்தகைய கொடுமுடிகளைக் காணலாம். மூன்று உலகங்களையும் வென்று மும்மூர்த்திகளையும் ஏவல் கொண்ட இராவணன் புத்திர சோகத்தால் வாய்விட்டுப் புலம்புகின்றான். வீரவுணர்ச்சியும் சோக உணர்ச்சியும் மாறி மாறி வெளி வருகின்றன.

நிலையுமா திரத்து நின்ற
யானையும் நெற்றிக் கண்ணன்
மலையுமோ வெளிய வோநான்
பறித்தற்கு மறுவின் மைந்தன்
தலையுமார் உயிரும் கொண்டார்
அவருட லோடுந் தங்கப்
புலையனேன் இன்னும் ஆவி
சுமக்கின்றேன் போலும் போலும்[10]

என்ற பாட்டில் இவற்றைக் காணலாம். தன்னுடைய பண்டைப் பெருமைகள் எல்லாம் ஒவ்வொன்றாக அவன் நினைவிற்கு வருகின்றன. அவற்றுடன் தன்னுடைய அன்றைய நிலையையும் வைத்து எண்ணச் செய்கின்றது அவன் மனம். நினைத்ததை நினைத்தபடியெல்லாம் நிறைவேற்றி வாழ்ந்த அவன் பெண்ணொருத்தியின்பொருட்டு அனைத்தையும் இழந்து, மானம், வீரம் முதலிய உயர் பண்புகளையும் போக்கி, நிற்க வேண்டிய நிலை வந்து விட்டதே என்று ஏங்குகின்றான். அது மட்டுமா? தனக்கு எள்ளையும் நீரையும் கொண்டு மைந்தன் செய்ய வேண்டிய நீர்க்கடன்களைத் தான் அவனுக்குச் செய்யும் நிலை வந்து விட்டதே என்று உதிரக் கண்ணீர் வடித்துப் புலம்புகின்றான்.

10. இராவணன் சோகம்-35

சினத்தொடும் கொற்றம் முற்ற
 இந்திரன் செல்வம் மேவ
நினைத்தது முடித்து நின்றேன்
 நேரிழை ஒருத்தி நீரால்
எனக்குநீ செய்யத் தக்க
 கடன்எலாம் ஏங்கி ஏங்கி
உனக்குநான் செய்வ தானேன்
 என்னின்யார் உலகத்து உள்ளார்?[11]

என்ற பாடலில் இராவணன் அடைந்த துக்கத்தின் கொடுமுடியைக் காணலாம். பாடலின் இறுதி இரண்டடிகளைப் படிக்கும்பொழுது நமக்கே நெஞ்சு வெடித்து விடும் போலாகி விடுகின்றது.

மைந்தன் போரில் மடிந்ததைக் குறித்து மண்டோதரி புலம்பும் பாடல்களில் சோகத்துடன் சின்னஞ்சிறு வயதில் தாய் குழந்தையை வளர்த்த அருமையும் 'விளையும் பயிர் முளையிலே தெரியும்' என்ற பழமொழிக்கொப்ப அக் குழந்தை தன் தளர்நடைப் பருவத்திலேயே செய்த அருஞ் செயல்களும் காட்டப்பெறுகின்றன.

கலையினால் திங்கள் போல
 வளர்கின்ற காலத் தேயுன்
சிலையினால் அரியை வெல்லக்
 காண்பதோர் தவமும் செய்தேன்
தலையிலா வாக்கைக் காண
 எத்தவம் செய்தேன் அந்தோ
நிலையிலா வாழ்வை இன்னும்
 நினைவனோ நினைவி லாதேன்?

[வாக்கு-உடல்]

---

11. இராவணன் சோகம்-39

தாளரிச் சதங்கை யார்ப்பத்
தவழ்கின்ற பருவந் தன்னில்
கோளரி இரண்டு பற்றிக்
கொணர்ந்தனை; கொணர்ந்து கோபம்
மூளுறப் பொருத்தி மாட
முன்றிலின் முறையி னோடு
மீளரு விளையாட்டு இன்னம்
காண்பனோ விதியி லாதேன்?
[கோளரி-சிங்கம்]

அம்புலி அம்ம! வாவென்று
அழைத்தலும் அவிர்வெண் திங்கள்
இம்பர்வந் தானை 'அஞ்சல்!'
எனஇரு கரத்தின் ஏந்தி
வம்புறு மறுவைப் பற்றி
முயல்என வாங்கும் வண்ணம்
எம்பெருங் களிறே காண
வேசற்றே எழுந்தி ராயோ?[12]

அதுமட்டுமா? எங்கெங்கு இறப்புகளினால் புலம்பல்கள் நடை பெறுகின்றனவோ அங்கங்கெல்லாம் சோகத்தின் உச்சநிலையைக் காணலாம். இராவணன் இறந்தபொழுது வீடணன், மண்டோதரி ஆகியோர் புலம்புவதாகவுள்ள பாடல்களில் கம்பனின் சோகத் துடிப்புதான் காணப்படு கின்றது என்று தெரிந்து கொள்ளலாம்.

கம்பனுக்கு இவ்வளவு சோகம் ஏற்படுவதற்குக் காரணம் என்ன என்பது புலப்படவில்லை. கம்பனுடைய உண்மையான வரலாறுபற்றிய குறிப்புகள் ஒன்றும் சரி யாகக் கிடைக்கவில்லை. தனிப்பாடல திரட்டு, தமிழ்க் நாவலர் சரிதை, புலவர் புராணம் ஆகிய நூல்களில் காணப்பெறும் குறிப்புகளனைத்தும் நம்பத் தக்கனவாக

12. இராவணன் சோகம்-47, 49, 50

இல்லை. அம்பிகாபதியின் வரலாற்றை உண்மையாகக் கொண்டால் கம்பனுடைய துக்கத்திற்கு ஒருவாறுகாரணம் கற்பிக்கலாம். அம்பிகாபதி சோழன் மகளைக் காதலித்த தாகவும், அதனுல் அவனுக்கு மரணதண்டனை நேர்ந்ததாக வும் வரலாறு ஒன்று வழங்கி வருவதை யாவரும் அறிவர். 'அம்பிகாபதி இறந்த பிறகு கம்பன் இராமயணத்தைப் பாடியிருக்க வேண்டும் என்றும், அப்படிப் பாடியதனுல்தான் தக்க சூழ்நிலையிருந்தும் தன்னுடைய ஒரே மைந்தன் இறந்த துக்கத்தின் மேலீட்டால் குழந்தையின்பத்தைப்பற்றி எங்குமே பாடவில்லை என்றும், ஆனுல் சோகவுணர்ச்சியைக் காட்ட வேண்டிய இடங்களில் அது மிகச் சிறப்பாகக் காட்டப் பெறுகின்றது என்றும் ஊகம் செய்ய முடிகின்றது. அந்த ஊகத்தை உறுதிப்படுத்த வேண்டுமானுல், கம்பனு டைய உண்மையான வரலாறு தக்க சான்றுகளைக் கொண்டு எழுதப்பெறல் வேண்டும். அத்துறையில் பணியாற்ற வேண்டியது இன்றைய தமிழ் அறிஞர்களின் கடமையாகும்.

# 5. அறிமுகம்

அகலிகையைக் கௌதம முனிவரிடம் சேர்ப்பித்து விட்டு இராம இலக்குமணர்களும் விசுவாமித்திர முனிவரும் மிதிலை நகரை நோக்கி வருகின்றனர். அங்கு பலவிதமான காட்சிகளைக் கண்டு களிக்கின்றனர். சனக மகாராசனின் அரண்மனைக்குள் புகுந்து அங்குள்ள பல காட்சிகளைக் கண்டு களித்துக் கொண்டு கன்னிமாடத்தருகே வரும்போது மேன் மாடத்தில் நின்று கொண்டிருந்த சீதையை இராமன் பார்க்க நேரிடுகின்றது, சீதையும் இராமனைப் பார்க்கின்றாள். இதனைக் கம்பன்,

கண்ணொடு கண்ணிணைக்
  கவ்வி ஒன்றையொன்(று)
உண்ணவும் நிலைபெறு(து)
  உணர்வும் ஒன்றிட
அண்ணலும் நோக்கினான்;
  அவளும் நோக்கினாள்.[1]

[இணை-இரண்டு; கவ்வி–பற்றி; உண்ணவும்-கவர்ந்து அநுபவிக்கவும்; ஒன்றிட-ஒற்றுமைப் பட]

---

1. மிதிலைக் காட்சி—35

என்று காட்டுகின்றான். முன்பின் ஒருவரையொருவர் அறியாதவர்களை ஊழ் ஒன்று சேர்த்து வைக்கின்றது; அறிமுகம் ஆகின்றனர். ஆனால், ஒருவரையொருவர் பார்க்க நேரிடும்போது கூட ஒருவரையொருவர் இன்னார் என்று அறிந்து கொள்ள இயலவில்லை. இருந்தாலும் கண்ணின் பார்வையாகிய கயிற்றினால் பிணிக்கப்பட்டவர்களாகி, 'வரிசிலை அண்ணலும் வாட்கண் நங்கையும்' மாறி மாறி ஒருவர் உள்ளத்தில் மற்றொருவர் படிகின்றனர். உடல் இரண்டு உயிர் ஒன்று என்று சொல்லும்படியாக ஆய்விடுகின்றனர்.

இரவு வருகின்றது; முழு மதியமும் உதயமாகின்றது. அக்காட்சி பாற்கடலைக் கடைந்தபோது அமுதம் நிறைந்த பொற்கலசம் எழுவதைப் போலிருக்கின்றது. நீலமேக சாமள வண்ணனான திருமாலின் வயிற்றில் ஒரு தாமரை பூத்ததைக் கண்டு கருங்கடலும் ஒரு தாமரை மலரைத் தன்னிடம் தோற்றுவித்ததோ என்றுகூட ஐயுறும்படி இருந்தது சந்திரனுடைய தோற்றம். அப்படித் தோன்றின சந்திரனுடைய கதிர்கள்.

முழுமதியம் தோன்றும் நாள் பிரிந்து கிடக்கும் காதலர்களுக்குக் கொடிய காலமல்லவா? நிலாக் கதிர்கள் சீதையின்மீது படுதலால் அவள் உடல் வெம்பி மனந் தளர்ந்து செந்தாமரை மலராலான படுக்கையில் புரண்டு புரண்டு கிடக்கின்றாள். அவளுடைய விரக தாபத்தால் தாமரை மலர்கள் கூட சாம்பிப் பொலிவழிந்து விடுகின்றன. தோழிமார்கள் சீதைக்குச் செய்யும் பணிவிடைகள் யாவும் அவளுடைய விரக தாபத்தை மிகுவிக்கின்றனவேயன்றித் தணித்தபாடில்லை. காம நோயைத் தீர்க்கக்கூடிய மருந்துகூட உலகத்திலிருக்கின்றதா?

விசுவாமித்திரரையும் இராம இலட்சுமணரையும் சனகன் வரவேற்று அவர்களை ஒரு மாளிகையில் தங்க வைக்கின்றான். அவர்கள் மூவரும் மகிழ்ச்சியுடன் அங்குத் தங்கியிருக்கின்றனர். அவ்வமயம்,

'மாதவம் யாவுமோர்
செய்கை கொண்டு நடந்தென,'[2]

அகலிகை பெற்றெடுத்த சதானந்த முனிவர் வந்து அவர்களைக் காண்கின்றார். முதலில் இராமன் வந்து அவரை வணங்க அவனுக்கு முனிவர் அநேக ஆசி மொழிகளை அருளுகின்றார்; பிறகு விசுவாமித்திரரருகே அமர்கின்றார். 'தாங்கள் இவ்விடம் எழுந்தருள இம் மிதிலாநகரம் செய்துள்ள புண்ணியந்தான் யாதோ?' என்று விசுவாமித்திரரை நோக்கிக் கூறுகின்றார் சதாநந்த முனிவர்.

'வடித்த மாதவ! கேட்டிஇவ் வள்ளல்தான்
இடித்த வெம்குரல் தாடகை யாக்கையும்
அடுத்துஎன் வேள்வியும் நின்அன்னை சாபமும்
முடித்துஎன் நெஞ்சத்து இடர்முடித் தான்'[3]

[வடித்த-தெளிந்து எடுக்கப்பட்ட; கேட்டி-கேட்பாய்; இடித்த-இடியை யொத்த; இடர்-துயரம்]

என்று இராமன் தாடகையைக் கொன்று தனது வேள்வியை வெற்றிகரமாக முடிக்க உதவினதையும், சதாநந்தரது அன்னையாகிய அகலிகையின் சாபத்தைத் தீர்த்ததையும் கூறி இராமனது சிறப்பையும் அவனது தெய்விகத் தன்மையையும் முனிவருக்குக் குறிப்பிடுகின்றார். கேட்டுக் கொண்டிருந்த சதாநந்தர், 'உமது அருள் இருக்கும் வரையில் இவ்வீரனுக்கு அரிதாகிய காரியம் யாதேனும் உண்டோ?' என விளம்புகின்றார்.

பிறகு இராமனை நோக்கிச் சதாநந்தர் ஆதியில் ஒரு பேரரசனாக இருந்து இன்று ஒரு மாமுனிவராகவிருக்கும் விசுவாமித்திரருடைய வரலாற்றை விரிவாகக் கூறி

2. மிதிலைக் காட்சி—84
3. ஷை—88

அவருடைய சிறப்பையெல்லாம் இராமன் அறியும்படி செய்கின்றார். இவ்வாறு சனகனுடைய மாளிகையில் சதாநந்த முனிவர் இராமனது சிறப்பையறியவும் இராமன் விசுவாமித்திரருடைய பெருமையை அறியவும் ஒரு நல்ல வாய்ப்பு ஏற்படுகின்றது. பிறகு சதாநந்தர் தன் இருப்பிடம் செல்கின்றார்.

இரவு வருகின்றது; இலக்குவனும் விசுவாமித்திரரும் அவரவருடைய படுக்கையிடங்களை அடைகின்றனர். இராமனுக்கு இரவும், நிலாவும், தனிமையும் சீதையின் நினைவை ஊட்டுகின்றன. அவன் மனக்கண்முன் சீதையின் உருவம் தோன்றுகின்றது. வானத்திலுள்ள மின்னல்தான் பெண் உருக்கொண்டு வந்திருக்கின்றதோ? என்று ஏங்குகின்றான். ஊழிக்காலம் கடந்தது போல ஒருவாறு அவ்விரவு கழிகின்றது.

பொழுது புலர்கின்றது; இராமன் துயில் எழுகின்றான். காலைக் கடன்களையும் அன்றாடம் செய்ய வேண்டிய ஏனைய கடமைகளையும் முடித்துக் கொண்டு விசுவாமித்திர முனிவரை வணங்கி அவருடனும் மனத்துக்கினிய தம்பியோடும் சனக மகாராசனது பெரு வேள்விச் சாலையை அடைகின்றான். சனக மகாராசனும் வேத விதிப்படி வேள்வி காரியங்களையெல்லாம் முடித்துவிட்டு திருவோலக்க மண்டபத்துக்கு வந்து மாதவ முனிவராகிய விசுவாமித்திரரருகில் அமர்கின்றான்; இராம-இலட்சுமணரும் முனிவர் அருகில் அமர்ந்திருக்கின்றனர். சனக மகாராசன்,

> 'இருந்தகுலக் குமரர்தமை இருகண்ணின்
> முகத்தழகு பருக நோக்கி
> அருந்தவனை அடிவணங்கி யார்? இவரை
> உரைத்திடுமின் அடிகள்! என்னக்'[4]

கேட்கின்றான் விசுவாமித்திரரை நோக்கி. நீண்ட நாட்

4. மிதிலைக் காட்சி—157

களாகத் தன் குலக் கொழுந்தாகிய சீதைக்கு ஏற்ற கணவன் கிடைக்கப் பெறவில்லையே என்று ஏங்கிக் கவலையுற்றுக் கிடக்கும் சனக மகாராசனைத் தன் பக்கத்தில் அமர்ந்திருக்கும் அரச குமாரர்களின் முகத்தழகு ஈர்த்து விடுகின்றது; அவ்வழகினையெல்லாம் பருகி விடுவான் போல அவ்வளவு ஆவலாகப் பார்க்கின்றான் அரசன். இவர்கள் யாவர் என்பதைத் தெரிந்து கொள்ள வேண்டும் என்ற ஆர்வமும் உந்துகின்றது; மாமுனிவர் திருவடிகளில் வீழ்ந்து தண்டனிட்டு அவர்களை அறிமுகம் செய்யுமாறு வேண்டுகின்றான்.

சனகனுடைய உட்கருத்தையெல்லாம் விசுவாமித்திரர் நன்கு அறிந்தவரல்லவா? பன்னெடு நாட்களாக அவன் கொண்டுள்ள கவலையை நன்கு அறிந்திருந்தார் அவர்.

விருந்தினர்கள்; நின்னுடைய வேள்விகா
ணியவந்தார்; வில்லும் காண்பார்;
பெருந்தகைமைத் தயரதன்தன் புதல்வர்என
அவர்தகைமை பேசல் உற்றான்.[5]

[வேள்வி–யாகம்; காணிய-காண்பதற்கு; பெருந்தகைமை-கம்பீரமான சிறந்த குணம்; தகைமை-மகிமை]

இவ்வாறு இராம லட்சுமணர்களை அறிமுகம் செய்து வைக்கின்றார் விசுவாமித்திரர் 'இவர்கள் உனது விருந்தினர்கள்' தாம்; உன்னுடைய சிறந்த யாகத்தைக் காண்பதற்காகத் தான் வந்திருக்கின்றனர்; இவர்கள் தசரதச் சக்கரவர்த்தியின் புதல்வர்கள்' என்று கூறுகின்றார். பன்னெடு நாட்களாகச் சீதையின் மணத்திற்கு ஈடாக வைக்கப் பெற்றிருக்கும், எந்த அரசகுமாரர்களாலும் எடுத்து நாண் ஏற்ற முடியாத, சிவதனுசை அறிந்துள்ள முனிவர்,

"வில்லும் காண்பார்!"[6]

என்று குறிப்பாக அறிவித்து, அவன் கொண்டிருக்கும்

5. ஷை—157
6. ஷை—157

மனக்குறை நீங்குவதற்குக் காலம் நெருங்கி விட்டது என்பதையும் குறிப்பாகத் தெரிவிக்கின்றார். பிறகு அக் குமாரர்களுடைய குலமுறையையெல்லாம் விரிவாக உரைக்கின்றார். நீண்ட நாட்களாக மகப்பேறு இல்லாது வருந்திய தசரதனுக்கு மகப்பேறு உண்டான வரலாற்றையெல்லாம் கூறுகின்றார். பிறகு,

திறையோடும் அரசிறைஞ்சும்
  செறிகழற்கால் தசரதனும்
பொறையோடும் தொடர்மனத்தான்
  புதல்வரெனும் பெயரேகாண்;
உறையோடும் நெடுவேலாய!
  உபநயன விதிமுடித்து
மறையோது வித்துஇவரை
  வளர்த்தானும் வசிட்டன்காண்;[7]

[திரையோடு- கம்பங்களுடன்; கழல், வீரக்கழல்; மறை ஓடுவித்து-வேதங்களை விரைவில் பயிலும்படி செய்து]

என்று இராமனை அறிமுகம் செய்து வைக்கின்றார். 'தசரதனுக்கும் புத்திரன் என்ற முறையைத் தவிர வேறு ஒன்றும் இல்லை; இவனுக்கு ஞானக்கண் திறந்து வேதங்களையெல்லாம் பயிற்றுவித்து இவனை ஒருசிறந்த மனிதனாக ஆக்கியதெல்லாம் வசிட்டனே' என்று இராமனுடைய கல்வி, திறமை முதலியவற்றையெல்லாம் தெரிவிக்கின்றார் முனிவர். ஆசிரியன்தான் உயிரை வளர்க்கும் தந்தை என்பதையும் குறிப்பிட்டுவிடுகின்றார்.

இராமனுடைய வீரத்தையும் வில்லாற்றலையும் தெரிவிக்க விரும்பிய முனிவர் தான் செய்த வேள்வியைக் காத்தற்பொருட்டு இராமலட்சுமணர்களைக் கூட்டிச் சென்ற

7. குலமுறை கிளத்து-24

தையும், அங்குத் தாடகை இராமனது அம்பால் பட்டதை யும், சுபாகு விண்ணுலகடைந்ததையும், மாரீசன் மறைந்து சென்றதையும் உணர்த்துகின்றார். தவமகிமையால் தான் பெற்ற படைக் கலங்களையெல்லாம் தான் இராமனுக்கு ஈந்ததையும் குறிப்பிடுகின்றார். இவ்வாறு கூறியவர்,

அலையுருவக் கடலுருத் (து)
ஆண்டகைதன் நீண்(டு) உயர்ந்த
நிலையுருவப் புயவலியை
நீயுருவ நோக்கையா![8]

என்று கூறி, இராமனது கைவண்ணத்தை ஆராய்ந்து பார்க்கும்படி கேட்கின்றார். அத்துடன் விட்டாரா?

கோதமன்றன் பன்னிக்கு
முன்னைஉருக் கொடுத்த(து) இவன்
போது நின்ற(து)எனப் பொலிந்த
பொலன்கழற்கால் பொடிகண்டாய்[9]

[பன்னி-பத்தினி; முன்னை உரு- பழைய வடிவம்; கழற்கால் பொடி-திருவடியின் தூளி]

என்று இராமனது கால்வண்ணத்தையும் உணர்த்துகின்றார்.

சிவதனுசைக் கன்யாசுல்கமாக வைத்திருக்கும் வர லாற்றை இராமனுக்கு சனகன் கூறுகின்றான். பிறகு அவன் கட்டளைப்படி அறுபதினாயிரம் வீரர்கள் அவ்வில்லைச் சுமந்து கொண்டு வருகின்றனர். சதாநந்த முனிவர் அந்த வில் சனகனிடம் வந்த வரலாற்றை உணர்த்தி சீதை தோன்றிய விவரங்களையும் தருகின்றார். சீதையின் பேரழ கைக் கண்டு பல மன்னர்கள் வந்து மணம் பேசியதையும், அதற்கு மறுமொழியாக சிவதனுசை வளைத்து நாணேற்று

8. குலமுறை-26
9. ஷை-29

பவருக்கே சீதை உரியவள் என்று தாம் கூறியதையும், பலர் வந்து வில்லை வளைக்க முயன்று மலைத்து வெட்கிச் சென்றதையும், பிறகு எல்லா மன்னர்களும் ஒன்று சேர்ந்து சனகனுடன் போர் தொடுத்ததையும் அவர்கள் எல்லோரையும் சனகன் முறியடித்து வென்றதையும் கூறி இறுதியாக,

அன்றுமுதல் இன்றளவும்
ஆரும் இந்தச் சிலையருகு
சென்றும் இலர்; போயொளித்த
தேர்வேந்தர் திரிந்தும்இலர்;
என்றும்இனி மணம்இல்லை
என்(று) இருந்தேம்'[10]

என்று அறிவிக்கின்றார். இன்று இராமன் இந்த வில்லை எடுத்து நாணேற்றி விட்டால் நன்று என்றும், அப்போது சீதையின் அழகும் வீண்போகாது என்றும் உணர்த்துகின்றார்.

அவையிலுள்ள அனைவரும் அமைதியாகச் சதாநந்த முனிவரின் மொழிகளைக் கேட்டுக் கொண்டிருக்கின்றனர். விசுவாமித்திரரும் கவனமாகக் கேட்டுக் கொண்டிருக்கின்றார்.

'நினைந்தமுனி பகர்ந்தவெலாம்
நெறி உன்னி அறிவனும்தன்
புனைந்தசடை முடிதுளக்கிப்
போரேற்றின் முகம்பார்த்தான்'[11]

[நினைந்து–ஆலோசித்து; அமுனி-அந்த சதாநந்த முனிவர்; அறிவன்-விசுவாமித்திரன்; துளக்கி-அசைத்து]

10. கார்முகம்-24
11. ௸ -25

சரிதான்!' என்று தனது சடை முடியை அசைத்து இராம னுடைய முகத்தைப் பார்க்கின்றார். அப்பார்வையில் பேசாத பேச்சாக 'இவ்வில்லை நீ முறிப்பாயாக!' என்ற ஆணையைக் காண்கிறான் இராமன்.

'வனைந்தனைய திருமேனி
வள்ளலும் அம் மாதவத்தான்
நினைந்தவெலாம் நினைந்து அந்த
நெடுஞ்சிலையை நோக்கினான்'[12]

[வனைந்தனைய-ஓவியத்தில் எழுதியது போன்ற; மாதவத்தோன்-விசுவாமித்திரன்]

வில்லைப் பார்க்கும் போதே அதை எந்த இடத்தில் எப்படிப் பிடித்து ஒடிக்கலாம் என்ற திட்டங்களையெல்லாம் போட்டு விடுகின்றான் இராமன். வில்லின் பக்கத்தில் எழுந்து செல் லும்போதே 'வில் அழிந்துபட்டது' என்று விண்ணவர்கள் ஆர்த்தனர். முப்பகை வென்ற முனிவர்கள் ஆசிகள் கூறினர். இராமன் வில்லை முறித்து விடுகின்றான்; விரை வில் சீதையின் திருமணமும் நடந்தேறுகின்றது.

இங்ஙனம் 'கருங்கடல் பள்ளியில் கலவி நீங்கிப்போய்ப் பிரிந்தவர்' ஒன்று சேர்வதற்கு விதி செய்து வைக்கும் அறிமுகம் வியக்க வேண்டிய தொன்றாகும். விதிதான் இராமனை விசுவாமித்திரரிடம் கூட்டிவைக்கின்றது. தரு வனத்துள் வேள்வி செய்யும்போது நிருதர் விலக்காதபடி காத்தற்குச் சிறுவர் நால்வரினும் கரிய செம்மலை அனுப் பும்படி விசுவாமித்திரன் கேட்டபோது பின்னால் நிகழப் போவதை அறியாது 'கண்ணிலான் பெற்று இழந்தான்' போல் தசரதன் வருந்துகின்றான். வருவதை அறியவல்ல வசிட்டன் யோசனைப்படி இராமலட்சுமணர்களைத் தசரதன் முனிவருடன் அனுப்புகின்றான். அவர்கள் மூவரும் மிதிலை நகர் வந்தபோதும் அந்த ஊழ்தான் இராமனும்

12. ஷை:25

சீதையும் ஒருவரையொருவர் பார்ப்பதற்குக் கூட்டிவைக்கின்றது. இராமனது பெருமையை விசுவாமித்திரரால் அறிந்த சதாநந்தர், விசுவாமித்திரருடைய பெருமைகளையெல்லாம் இராமனுக்கு உணர்த்துகின்றார். இதுவும் விதியின் செயலே. அவற்றைக் கேட்ட இராமனுக்கு முனிவரிடம் பெரும் பக்தி ஏற்படுகின்றது. சனகன் விசுவாமித்திரருடன் வந்த அரசிளங்குமாரர்களைப் பார்க்கும்பொழுது இராமனது அழகில் ஈடுபடுவதும் ஊழின் வலிதான் என்று சொல்லவேண்டும். இங்ஙனம் பல அறிமுகங்களின் விளைவாக மானிடப் பிறவியில் சீதையும் இராமனும் அறிமுகம் ஆகி ஒன்று சேர்கின்றனர்.

# 6. மலைக் காட்சி*

குகப்பெருமானிடம் விடைபெற்றுச் சென்ற இராமன் இலக்குவனுடனும் சீதையுடனும் வனத்தில் புகுகின்றான். அங்குப் பல காட்சிகளைச் சீதைக்குக் காட்டிக்கொண்டே சென்று, இறுதியில் எதிர் கொண்டு வரவேற்ற பரத்துவாச முனிவரைக் கண்டு அவர் ஆசிரமத்தில் உபசரிக்கப் பெற்று, அவரிடம் விடை பெற்றுக் கொண்டு, அவர் யோசனைப்படிச் சித்திர கூட மலையை நோக்கிச் சென்று கொண்டிருக்கின்றான். வழியில் ஒரு பாலை வனத்தைக் கடக்க நேரிடுகின்றது. அம்மூவரும் பாலைவனத்தையும் மெதுவாகக் கடந்து சென்று,

'குளிறு வான்மதிக் குழவிதன்
　　சூல்வயிறு ஒளிப்பப்
பிளிறு மேகத்தைப் பிடியெனப்
　　பெரும்பனைத் தடக்கைக்
க்ளிறு நீட்டுமச் சித்திர
　　கூடத்தைக் கண்டார்[1]

[குளிறும்-ஒலிக்கும் தன்மையுள்ள; வான்-ஆகாயம்; மதிக் குழவி-இளஞ்சந்திரன், பிறை; சூல்

* தினமணி கதிரில் (17-2-52) வெளிவந்தது.

1. வனம்புகு—47.

வயிறு - கருக் கொண்ட வயிறு; பிளிறும் - இடிக்கின்ற; பிடி-பெண்யானை; தடகை - பெரிய துதிக்கை; களிறு - ஆண்யானை].

வானத்தில் மேகம் கருக்கொண்டிருக்கின்றது. சூல் கொண்ட கார்மேகத்தில் பிறைமதி மறைந்திருக்கின்றது. அவ்வாறு கூடிய மேகத்தினிடையே இடி முழக்கம் கேட்கின்றது. எங்கும் ஒரே இருள். இடையிடையே மின்னலுடன் இடிமுழக்கத்தைக் கேட்கும் ஆண்யானை ஒன்று, கூடின மேகத்தைப் பெண்யானை என்று கருதித் தனது பனைமரம் போன்ற துதிக்கையை நீட்டுகின்றது. இத்தகைய காட்சிக்கு இடமாகவுள்ள வானளாவிய சித்திர கூடமலையை இராமன் முதலியோர் காண்கின்றனர்.

அச்சித்திர கூடமலையில் நீளமாக அசையாது இருக்கும் நீரையுண்டை காளமேகத்துக்கும் யானைக்கும் வேற்றுமை தெரியவில்லை. மலைகளில் மலையாடுகள் குதித்து வரும்போது மலையில் கிடக்கும் மரகத இரத்தினங்களின் ஒளி அவற்றின்மீது படும்போது அந்த ஆடுகள் கதிரவனுடைய பச்சைக் குதிரைகளைப் போல் காட்சியளிக்கின்றன. மதயானைகளையும் விழுங்கவல்ல மலைப் பாம்புகளின் மேல் தோல்கள் மூங்கில்களில் சிக்கிக்கொண்டு காற்றால் அசைந்து கொண்டிருக்கின்றன. அவை அயோத்திமாநகரிலுள்ள மாளிகைகளில் அசைந்து கொண்டிருக்கும் வெண்ணிறக் கொடிகளைப்போல் காட்சி யளிக்கின்றன. சில மலைப் பாம்புகள் யானையை விழுங்குவதற்குப் பற்றுகின்றன. அவ்யானை மதநீரை மழைபோலச் சொரிவதனாலும் பாம்புகளின் மாணிக்க ஒளி அங்கு வீசுவதனாலும் 'மழைதான் பெய்கின்றதோ?' என்று அஞ்சி அப்பாம்புகள் அவ்யானையை விட்டு விடுகின்றன; அத்துடன் தமது மணிகளையும் சிந்தி விட்டுச் செல்கின்றன. பயந்து விழுந்தடித்துச் செல்லும் யானையின் நெற்றியில் வேங்கை மலர்களும் நாகரத்தினங்களும் ஒட்டிக் கொள்ளுகின்றன. அவை பொன் தகட்டில் மணிகள் பதித்த நெற்றிப் பட்டம் போல்

விளங்குகின்றன. இக்காட்சிகளையெல்லாம் சீதைக்கு இராமன் காட்டிச் செல்லுகின்றான்.

ஓர் இடத்தில் அற்புதமான நிகழ்ச்சியொன்று நடைபெறுகின்றது. ஓர் ஆண் யானையும் ஒரு பெண் யானையும் சேர்ந்தாற்போல் காணப்படுகின்றன. பெண் யானை நிறைந்த கருப்பத்துடன் இருக்கின்றது. ஆண் யானை மனம் உருகும் காதலுடன் மரத்திலிருந்து ஒரு தழைக் கொத்தைத் துதிக்கையால் ஒடித்து அதைக் கொண்டு மலைப் பொந்திலுள்ள ஒரு பெரிய தேன் கூட்டில் மொய்த்துக் கொண்டிருக்கும் இன் குரலைக் கொண்ட தேனீக்களை ஓட்டுகின்றது. பிறகு நறுமணமுள்ள செந்தேனினைக் கூட்டோடு துதிக்கையால் எடுத்து கருவைத் தாங்கியுள்ள பெண் யானை பருகுமாறு அதன் வாயில் வைக்கின்றது. இதனைக் கம்பன்,

உருகு காதலின் தழைகொண்டு
மழலைவண் (டு) ஒச்சி
முருகு நாறுசெந் தேனினை
முழைநின்றும் வாங்கிப்
பெருகு சூல்இளம் பிடிக் (கு) ஒரு
பிறைமருப் (பு) யானை
பருக வாயினிற் கையினின்(று)
அளிப்பது பாராய்![2]

[மழலை-இன்குரல்; ஒச்சி-ஓட்டி; முருகு-நறு மணம்; முழை-மலைப் பொந்து; பெருகுசூல்-முதிர்ந்த கருப்பம்]

என்று காட்டுகின்றான். இக்காட்சியையும் சீதைக்குக் காட்டுகின்றான் இராமன்.

குறிஞ்சி நில மகளிர் ஊடல் கொண்டு தம் கணவன்மாரை நாடாதிருக்கின்றனர், அவர்கள் மனமுருகித்

2. சித்திர கூடம்—10

தாமாகவே தத்தம் கொழுநரை அடையும் வண்ணம் கின்னர மிதுனங்கள் பாடுகின்றனர். மானிட முகமும் குதிரையுடலும் கொண்ட இத் தேவ சாதியார் கின்னரம் என்னும் இசைக் கருவியினைக் கொண்டு பாடுவதாகக் கவிஞர்கள் கூறுவர். ஒரு பக்கத்தில் தினைப்புனங் காக்கும் மகளிர் குருவிந்தம் என்ற ஒரு வகை மாணிக்கக் கற்களை எறிந்து கதிர்களைத் தின்ன வரும் குருவிகளை வெருவி யோடுமாறு விரட்டுவர். அக்கற்கள் வானிடைச் சென்று பேரொளியுடன் நிலத்தில் வீழ்வது விண்மீன்கள் வீழ்வது போன்றுள்ளது. மற்றொரு பக்கத்தில் மறத்துறைவேடர் அகிற்கட்டைகளைச் சுடுவதனல் உண்டாகும் புகையும், அறத்துறை அந்தணர் வேள்வித் தீயினின்றெழுந்த புகை யும் ஒன்று சேர்ந்து கருநிற முள்ள பெரிய கொடுமுடி போல் காட்சியளிக்கின்றன. பிறிதொரு புறத்தில் வேங்கை கொங்கு முதலிய மரங்களில் கட்டப் பெற்றுள்ள ஊஞ்சலிலிருந்து கொண்டு பாடிய மகளிரின் குறிஞ்சிப் பண்ணினைச் செவி மடுத்து அசுணமாக்கள் என்ற ஒருவகை இசையறிவிலங்குகள் அவர்களை நோக்கிச் செல்லுகின்றன. பல இடங்களிலும் காணப்பெறும் மாணிக்கப் பாறைகளில் மூங்கிலினம் சொரிந்த முத்துகள் செக்கர் வானத்திடை யேயுள்ள விண்மீன்களை யொத்துள்ளன. இக்காட்சிகளை யெல்லாம் இராமன் சீதைக்கு ஒவ்வொன்முகக் காட்டிச் செல்லுகின்ருன்.

சில யானைக் குட்டிகள் தும்பிக்கையால் மலையருவி நீரை முகந்து கொண்டுவந்து மூப்படைந்த முனிவர்களின் கமண்டலங்களில் சொரிந்து அவற்றை நிரப்புகின்றன. இக்காட்சியையும் அவர்கள் காண்கின்றனர். சில ஆண் யானைகள் பிரசவ வேதனையடையும் பெண் யானைகளைத் தம் துதிக்கையால் தாங்கி நிற்கின்றன. மேகங்களின் இடியோசையைக் கேட்டு அதைச் சிங்கத்தின் ஒலிதான் எனக் கருதிச் சில யானைகள் நெறிகெட்டு ஓடுகின்றன. இவற்றையும் இராமன் சீதைக்குக் காட்டுகின்ருன்.

இன்னும் அம்மலையில் கல்லின்மீது கட்டியுள்ள தேன் கூடுகளின்மீது மூங்கில் மரங்கள் காற்றால் அசையும்போது மோதி தேன் வழிந்து வேடர்கள் கவலைக் கிழங்கைத் தோண்டியெடுத்த குழிகளில் வந்து நிரம்புகின்றது. இக் காட்சியை,

வில்லி வரங்கிய சிலைதுநுதல்
 பொலிதுதல் விளக்கே
வல்லி தாங்கமை தாக்கலின்
 வழிந்திழி பிரசம்
கொல்லி வாங்கிய குன்றவர்
 கொடி நெடுங் கவலை
கல்லி வாங்கிவ குழிகளை
 நிறைப்பன காணாய்[3]

[வல்லி - கொடி; அமை—மூங்கில்; இழி - கீழே விழுகின்ற; பிரசம் - தேன்; கவலை - ஒருவகைக் கிழங்கு]

என்ற பாடலால் அறிகின்றோம்.

ஓர் ஆண் குரங்கும் பெண் குரங்கும் சேர்ந்து புனலாடுகின்றன; பெண் குரங்கு அருவி நீரை ஆண் குரங்கின்மீது வீசுகின்றது. அதற்கு மாறாக ஆண் குரங்கு மேகத்தைப் பிடித்துக் குலுக்கி நீர்த்துளிகளாகச் சிதறுமாறு செய்கின்றது. இன்னொர் ஆண் குரங்கு தினைப்புனம் காப்பதற்காக வேடர்கள் வைத்திருந்த பறையொன்றினை எடுத்துக் கொண்டு கொட்டி முழக்குகின்றது. சில ஆண் குரங்குகள் கண்ணொளி மங்கிய மாதவர்களுக்கு வழிகாட்டுகின்றன. சில குரங்குகள் மா, பலா, வாழை முதலியவற்றின் கனிகளைக் கொண்டு வந்து முனிவர்களுக்குப் பக்தியுடன் தருகின்றன. சில காட்டுப் பன்றிகள் கவலை, வள்ளி முதலிய கிழங்குகளைத் தோண்டிக் கொண்டு வந்து தவசி

3. சித்திரக்கூடம்—13

களுக்குத் தருகின்றன: கிளிகள் மலை நெல்லின் கதிரையும், தினைக் கதிரையும், சோளத்தின் கதிரையும் அவரைகளையும் மூங்கிலரிசிகளையும் தவசிகளின் ஆசிரமங்களில் கொண்டு வந்து சேர்க்கின்றன. இவற்றையெல்லாம் இராமன் சீதைக்குக் காட்டுகின்றான்.

இன்னொரு அற்புதமான காட்சி. அக்காட்சியைக் கம்பன்,

இடிகொள் வேழத்தை எயிற்றொடும்
எடுத்துடன் விழுங்கும்
கடிய மாசுணம் கற்றறிந்
தவரென அடங்கிச்
சடைகொள் சென்னியர் தாழ்விலர்
தாமித்(து) ஏறப்
படிக ளாம்எனத் தாழ்வரைக்
கிடப்பன பாராய்![4]

[இடிகொள் வேழம்—இடிபோல் ஒலிக்கும் யானை; எயிற்றொடும்—தந்தங்களோடும்; கடிய—கொடிய; மாசுணம்—மலைப் பாம்புகள்; தாழ்வு—குற்றம்; தாழ்வரை—மலை அடிவாரம்.]

என்று காட்டுகின்றான். மேகத்தினின்று தோன்றும் இடி போல் பிளிறக்கூடிய யானைகளையும் கொம்புகளுடன் விழுங்கவல்ல மலைப் பாம்புகள் கற்றறிந்த பெரியோர்போல் அடக்கத்தை மேற்கொண்டு குற்றமற்ற தவசியர் ஏறிச் செல்வதற்குப் படிகளாக உதவுமாறு மலையடிவாரத்தில் மடங்கி மடங்கிக் கிடக்கின்றன. இக்காட்சியையும் இராமன் சீதைக்குக் காட்டுகின்றான்.

4. சித்திரக் கூடம்—35

இவ்வாறு,

நினையும் தேவர்க்கும் நமக்கும் ஒ(த்து)
　ஒருநெறி நின்ற
அனகன் அம்கண் ஆயிரம்
　பெயருடை அமலன்
சனகன் மாமட மயிற்(கு)அந்தச்
　சந்தனம் செறிந்த
கனக மால்வரை இயல்பெலாம்
　தெரிவுறக் காட்டும்[5]

[நினையும்-நம்மால் நினைக்கப்படும்; தேவர்க்கும்-தேவர்களின் திறத்தும்; ஒரு நெறி நின்ற ஒரே நிலையில் நிற்கின்ற; அனகன்-குற்ற மற்றவன்; அமலன்-குற்றமற்றவன்; சனகமா மடமயில்-சீதாபிராட்டி; கனகம்-பொன்; இயல்பு-இயற்கை வளம்.]

இராமன் சீதைக்கு மலைவளத்தை காட்டிச் செல்லுகின்றான் என்று சொல்லும்போதே கம்பனுடைய இராம பக்தி பீறிட்டுக்கொண்டு வெளி வருகின்றது. தேவர்களிடத்தும் நம்மிடத்தும் ஒரே நிலையில் நிற்கின்றானும் இராமன்; அவன் குற்றமற்றவனும்; ஆயிரம் திருப் பெயர்களைக் கொண்ட குற்றமற்ற திருமாலின் திருவவதார மூர்த்தியாம் அவன்; அத்தகையவன் மயில்போன்ற சாயலையுடைய சனகன் புதல்வியாகிய சீதாப்பிராட்டிக்குச் சந்தன மரங்கள் நெருங்கியுள்ள பொன்னைத் தன்னிடத்தே கொண்ட சித்திரகூட மலையின் இயற்கை வளங்களையெல்லாம் காட்டிக்கொண்டு செல்லுகின்றான். இக்காட்சிகளைக் காணும் நாமும் குறிஞ்சித் திணையின் சூழ்நிலையைக் கண்டு களிக்கின்றோம்; உதக மண்டலம், கொடைக்கானல் போன்ற மலை நாடுகளில் இருப்பது போன்ற மனநிறைவினையும் பெற்று மகிழ்கின்றோம்.

---

5. சித்திரக்கூடம்—1

# 7. விளையும் பயிர்*

இலங்கை வேந்தனுடைய மூத்த குமாரன் மேகநாதன் என்போன் இராவணனுக்கு மயன் மகளாகிய மண்டோதரி வயிற்றில் பிறந்தவன். வீரர்களில் தலைசிறந்தவன். இளமையிலேயே தேவந்திரனுடன் போரிட்டு அவனைத் தோற்கடித்து சிறை செய்து கொண்டு வந்து தன் தந்தை முன் நிறுத்தி **'இந்திரஜித்து'** என்ற சிறப்புப்பெயர் பெற்றவன். இராமாயணத்தில் கம்பன் இவனை ஒரு சிறந்த வீரனாகப் படைத்துக் காட்டுகின்றான். பல இடங்களில் இவனது வீரச் செயல்களைக் காண்கின்றோம். சிறந்த வீரனும் யூகியுமான அநுமன் சீதையைத் தேடிச் சென்ற போது முதன் முதலில் நள்ளிரவில் இராவணனது மாளிகையில் இவனை உறங்கும் நிலையில் காண்கின்றான். இதனைக் கம்பன்,

**'முக்கண் நோக்கினன் முதல்மகன்**
**அறுவகை முகனும்**
**திக்கு நோக்கிய புயங்களும்**
**சிலகரந்து அனையான்**

---

*தினமணிக் கதிர் (13-1-52) இதழில் வெளிவந்தது.

ஒக்க நோக்கியர் குழாத்திடை
உறங்குகின் றானைப்
புக்கு நோக்கினன்'[1]

[முக்கண் நோக்கினன் முதல் மகன் - முருகன்; கரந்து - மறைத்து; ஒக்க நோக்கியர் - தன் அழகுக்குச் சமமான அழகுடைய மாதர்கள்]

என்று காட்டுகின்றான். மூன்று கண்களையுடைய சிவபெருமானின் சிறந்த குமாரனாகிய முருகக் கடவுள்தான் தனக்கு இயல்பாகவுள்ள ஆறுமுகங்களிலும் பன்னிரண்டு புயங்களிலும் சிலவற்றை மறைத்து வந்தானோ என்று ஐயுறும்படி, கட்டழகு வாய்ந்த மாதரிடையே உறங்குவதைக் கண்ணுறுகின்றான். குகையில் உறங்கும் சிங்கத்தைப் போன்றவனாகிய இவனை யாவன் என்று அநுமனால் அறுதியிட முடியாவிடினும்,

'இளைய வீரனும் ஏந்தலும்
இருவரும் பலநாள்
உளைய உள்ளபோர் இவனொடும்
உளதென'[2]

[இளைய வீரன்-இலக்குவன்; ஏந்தல்-இராமன்; உளைய-சிரமம் உண்டாகும் படி]

உணர முடிகின்றது. பாம்பின் கால் பாம்பறியுமல்லவா? ஒருவீரனை இன்னொருவீரன்தானே நன்கு அறிய முடியும்?

இளைய பெருமாள்கூட இவனுடைய ஆற்றலை வியந்தனன் என்றால் இவனது திறமையைச் சொல்லவும் வேண்டுமோ? நிகும்பலை யாகத்தை அழித்து இலக்குவன் இவனோடு போர்புரியும்போது இவன் தன் ஆற்றல்களையெல்லாம் ஒருங்கு திரட்டிப் பெருஞ்சமர் விளைவிக்கின்றான்.

---

1. ஊர்தேடு—140
2. ௸ —141

இலக்குவன் இவனுடைய சாரதியையும் தேரையும் அழித்து இவன்மீது அம்புமாரியைப் பொழியும் போதுகூட, இவன் சிறிதும் மனம் உடையாது தன்மீது பாய்ந்த அம்புகளைப் பிடுங்கி அவற்றை இலக்குவன்மீதும் அநுமன்மீதும் பிறர் மீதும் தூவி ஆர்ப்பரிக்கின்றான். இதனைக் கண்ணுற்ற இளையபெருமாளும். 'நன்று, நன்று' என்று மெச்சி மூக்கின் மீது விரலை வைக்கின்றான். இதனைக் கம்பன்.

எய்தவன் பகழி எல்லாம்
பறித்(து)அவன் என்மேல் எய்யும்
கைதடு மாறு(து) உள்ளம்
உயிர்இனம் கலங்கா யாக்கை
மொய்கணை கோடி கோடி
மொய்க்கவும் இளைப்பொன்(று) இல்லான்
ஐயனும் இவனோ(டு) எஞ்சும்
ஆண்தொழில் ஆற்றல் என்றான்[3]

[பகழி-அம்பு; கணை-அம்பு; மொய்கணை-ஏராள மான அம்புகள்; ஐயன்- இலக்குவன்; எஞ்சும் ஒழிந்து போகும்]

என்று நமக்குக் காட்டி விடுகின்றான். 'உலகில் இவனுடன் ஆண்மைத் தொழிலும் வல்லமையும் அழிந்து விடும்!' என்று இலக்குவனே வியந்து கூறுகின்றான். இவ்வாறு வீரர்கள் மெச்சும் புகழ்பெற்றவன் இந்திரசித்து.

மாற்றாரும் போற்றும் இத்தகைய ஒரு சிறந்த வீரன் இளமையில் எப்படியிருந்தான் என்பதை அறிந்து கொள்வதில் நமக்கு ஆர்வம் இருக்கத்தான் செய்கின்றது. நமக்கு ஆசையிருக்கும் என்பதை உணர்ந்தே கம்பநாடனும் அதனை நிறைவேற்றுவதற்கு ஒரு வாய்ப்பையும் உண்டாக்கி அங்கு நமது ஆர்வத்தையும் நிறைவேற்றுகின்றான்.

---

3. இந்திரசித்து வதை—31

இந்திரசித்து செய்த போரின் கொடுமையைத் தாங்க முடியாத நிலைமை ஏற்படுகின்றது. வீடணனும் விரைவில் அவனைக் கொன்று விடவேண்டும் என்று இலக்குவனை வற்புறுத்துகின்றான். இலக்குவன்,

'மறைகளே தேறத் தக்க
வேதியர் வணங்கற் பாலான்
இறையவன் இராமன் என்னும்
நல்லற மூர்த்தி என்னில்
பிறைஎயிற்(று) இவனைக் கோறி
என்(று)ஒரு பிறைவாய் வாளி
நிறையுற வாங்கி விட்டான்'...[4]

[மறைகள்-வேதங்கள்; தேறத் தக்க-ஆராய்ந்து அறியத் தக்க; இறையவன்-தலைவன்; பிறை எயிறு-பிறைச்சந்திரன் போன்ற கோரைப் பற்கள்; கோறி-கொல்வாய்]

இந்திரசித்தின் தலை அறுபட்டு உடல் மட்டிலும் மின்னலுடனும் இடியுடனும் பூமியில் விழும் மேகத்தைப்போல் விழுகின்றது; சற்று நேரத்தில் அவனது தலையும் மண்மீது உருள்கின்றது.

இத்தகைய சிறந்த வீரனுடைய இளமைப் பருவத்தைப் பற்றிக் கம்பன் எங்குமே நமக்குக் காட்டவில்லை. இவன் இறந்த பிறகு புத்திர சோகத்தால் புலம்பும் மண்டோதரியின் வாய்மொழியாகத்தான் இவனது இளமைப் பருவம் எவ்வாறு இருந்தது என்பதை நாம் அறிகின்றோம். 'விளையும் பயிர் முளையிலே தெரியும்' என்ற உண்மையையும் நாம் உணர்கின்றோம். பிற்காலத்தில் ஒரு சிறந்த வீரனாக விளங்கப்போவதற்குரிய அறிகுறிகள் யாவும் இவனது இளமை விளையாட்டுகளிலேயே காணப்பட்டதை நாம் அறிந்து வியப்படைகின்றோம்.

---

4. இந்திரசித்துவதை—51

இவனது பிரிவாற்ருமையைக் குறித்து இராவணன் பலவாருகப் புலம்பிப் போன பிறகு இவனது தலையற்ற உடல்கிடந்த இடத்திற்கு மண்டோதரி வருகின்ருள். தாமரைப் பூவினுல் கொங்கைகளைப் புடைக்கின்றது போல கைகளால் மார்பில் அடித்துக் கொண்டு வருகின்ருள். வந்து மைந்தன் உடலின்மீது விழுகின்ருள்.

**கொலையின்மேல் குறித்த வேடன்**
**கூர்ங்கணை உயிரைக் கொள்ள**
**மலையின் மேல் மயில்வீழ்ந் தென்ன**
**மைந்தன்மேல் மறுகி வீழ்ந்தாள்.**[5]

[கணை-அம்பு; மறுகி-துயரத்தால் கலங்கி]

என்பது கம்பன் காட்டும் காட்சி. வேடனுடைய கூரிய அம்பு உயிரைக்கொண்டு செல்லும்போது மயிலானது மலையின்மீது விழுவதுபோல இவள் இந்திரசித்தின் உடலின் மீது விழுந்தாள் என்று கம்பன் கூறும்போது அதிலுள்ள நயத்தை உணர்ந்து சுவைக்கின்ருேம். சற்று நேரம் உணர்ச்சியற்று அப்படியே கிடக்கின்ருள்; துக்கம் அவள் நெஞ்சை அடைத்து விடுகின்றது. சிறிது நேரத்தில் அயர்ச்சி நீங்கப்பெற்று விம்மி விம்மி கதறத் தொடங்கு கின்ருள்.

பெற்ற மனந்தானே பிள்ளையின் அருமையை அறிய முடியும்? பத்து மாதம் சுமந்து பெற்றுப் பாலூட்டிச் சீராட்டி பாராட்டி வளர்த்தவள் அல்லவா இவள்? தன் மகன் குழந்தையாக இருக்கும்போது நிகழ்ந்த நிகழ்ச்சி களில் ஒன்றிரண்டு அவளது நினைவுக்கு வருகின்றன. அவற்றையெல்லாம் சொல்லிச் சொல்லி அழுகின்ருள்; தேம்புகின்ருள்.

மேகநாதன் தவழ்ந்து விளையாடும் பருவத்தில் ஓர் அற்புதமான நிகழ்ச்சி நடைபெறுகின்றது. அப்பருவத்தில்

5. இராவணன் சோகப்—45

அவன் வலிமையுள்ள இரண்டு சிங்கங்களைப் பிடித்துக் கொண்டு மாளிகையின் முன்றிலுக்கு வருகின்றான். அங்கு அவற்றை முட்ட விட்டு வேடிக்கை பார்க்கின்றான். இதனை நினைந்து புலம்புகிறாள் மண்டோதரி.

தாளரிச் சதங்கை ஆர்ப்பத்
    தவழ்கின்ற பருவம் தன்னில்
கோளரி இரண்டு பற்றிக்
    கொணர்ந்தனை; கொணர்ந்து கோபம்
மூளுறப் பொருத்தி மாடம்
    முன்றிலின் முறையி னோடு
மீளரு விளையாட்(டு) இன்னம்
    காண்பனோ விதியி லாதேன்.[6]

[தாள்-கால்; அரி-பரல்; ஆர்ப்ப-ஒலிக்க; கோளரி வலிமையுடைய சிங்கம்]

என்பது கம்பன் வாக்கு. சதங்கை ஒலியுடன் தவழும் பருவத்தில் செய்த செயலை மண்டோதரியின் புலம்பலி லிருந்துதான் நாம் அறிகின்றோம்.

இன்னொரு நிகழ்ச்சியினையும் அறிகின்றோம் அவள் புலம்பலின் வாயிலாக. இவன் சிறு பிள்ளையாக இருக்கும் போது—அம்புலிப் பருவத்தில்—ஒரு சமயம் விண்மதியினைப் பார்த்து 'அம்புலி அம்மா, இங்குவா!' என்று அழைத்தா னாம். மதியும் இவனுக்குப் பயந்து இவனிடம் வந்து விட்டானாம். அப்படி வந்த சந்திரனைப் 'பயப்படாதே' என்று சொல்லி அவனை இரண்டு கைகளினாலும் வாங்கிக் கொண்டு, அவனுடைய களங்கத்தை முயல் என்று சொல்லிக் கிள்ளினானாம். அந்நிகழ்ச்சியும் மண்டோதரியின் நினைவுக்கு வரவே அவள்,

---

6. இராவணன் சோகப்—49

'அம்புலி அம்ம வாவென்(று)
அழைத்தலும் அவிர்வெண் திங்கள்
இம்பர்வந் தானை 'அஞ்சல்;'
எனஇரு கரத்தின் ஏந்தி
வம்புறு மறுவைப் பற்றி
முயலென வாங்கும் வண்ணம்
எம்பெருங் களிறே காண
வேசற்றே எழுந்தி ராயே'[7]

[அம்புலி-சந்திரன்; திங்கள்-சந்திரன்; இம்பர்-இவ்வுலகம்; வம்புறு-வீணைகப் பொருந்திய; மறு-களங்கம்; வாங்கும்-பிடுங்கும்]

என்று புலம்புகின்றாள். 'அந்த நிகழ்ச்சியை இன்னொரு தடவை எனக்குக் காட்டுவதற்காகவாவது நீ எழுந்திருக்க மாட்டாயா?' என்று கூறிப் புலம்பும்போதுதான் தாயன்பு வெளிப்படுவதைக் காண்கின்றோம்; அவலச் சுவையின் உச்ச நிலையை உணர்கின்றோம். நம்மை அறியாமல் நமக்கும் அழுகை வருகின்றது; அழுதேவிடுகின்றோம்.

சிறு பிள்ளையாக இருக்கும்போதே இந்திரனை நாக பாசத்தால் கட்டிக்கொண்டு வந்து தன் தாதையின் முன் நிறுத்தி இந்திரசித்து என்றசிறப்புப் பெயரையும் பெற்றான் என்று மேலே கூறினோமல்லவா? இதனை மண்டோதரி,

கலையினால் திங்கள் போல
வளர்கின்ற காலத் தேஉன்
சிலையினால் அரியை வெல்லக்
காண்பதோர் தவமும் செய்தேன்[8]

[சிலை-வில்; அரி- இந்திரன்]

என்று சொல்லிப் புலம்புகின்றான்.

7. இராவணன் சோகப்—50
8. ஷை -47

இங்ஙனம் பிற்காலத்தில் சிறந்த வீரனாக விளங்கி வதற்கு வேண்டிய அறிகுறிகள் யாவும் இவன் இளமைப் பருவத்திலே புலனாயின என்பதை இவன் இறந்த பிறகே கம்பன் நமக்குக் காட்டுகின்றான். இவ்வாறு இளமை யிலேயே பல வீரச்செயல்களை நிகழ்த்திய மேகநாதன் இராவணனுக்கு ஒரு சிறந்த பக்க பலமாக இருந்து விளங் கினான்; செயற்கரிய செயல்களையெல்லாம் செய்து புகழ் பெற்றான்.

இலக்குவனால் மூக்கும் காதும் வெம்முரண் முலைக் கண் களும் முறையே' போக்கப்பட்ட சூர்ப்பணகை தன் சுற்றத்தாரை யெல்லாம் நினைத்துப் புலம்பும் போது கூட,

தானவரைக் கருவறுத்துச்
சதமகனைத் தளையிலிட்டு
வானவரைப் பணிகொண்ட
மருகாவோ! மருகாவோ[9]

என்று இவனைக் குறிப்பிட்டுப் புலம்புகின்றாள். போரில் முதன்முதலாக இவனைச் சந்தித்த இலக்குவன் இவனை யார் என்று வினவ, அதற்கு வீடணன்,

'ஆரிய, இவன்இகல் அமரர் வேந்தனைப்
போர்க டந்தவன்[10]

என்று அறிவித்து,

'இன்று போர் வலி'து[11]

என்று அன்றையப் போரின் கொடுமையையும் குறிப்பாற் புலப்படுத்துகின்றான். தூது சென்றபோது அநுமனைப் பாசத்தால் பிணித்தப்போதும், இராம-இராவணப்போர் நடைபெற்ற காலத்தும், பிற சமயங்களிலும் இவன் ஆற்றிய வீரச்செயல்களுக்கெல்லாம் இவனது இளமைப் பருவத்தில் நடைபெற்ற நிகழ்ச்சிகள் அறிகுறிகளாக இருந்தன என்பதை அறியும்போது, 'விளையும் பயிர் முளை யிலே தெரியும் 'என்பதை உணர்கின்றோமன்றோ?

9. சூர்ப்பணகைப்-111
10, 11. நாகப்பாசப்-28

# 8. சிறைவைத்த காதல்*

இராமலட்சுமணரும் சீதாப்பிராட்டியும் கோதாவரி நதிக்கருகிலுள்ள பஞ்சவடிக்கு வருகின்றனர். அப்பஞ்சவடியில் மிகவும் தனிமையாக அமைந்துள்ள சோலையொன்றில் இலக்குவனால் இனிமையாகச் சமைக்கப்பட்ட பர்ணசாலையில் அவர்கள் மூவரும் தங்கியிருக்கின்றனர். இவர்கள் இங்கு தங்கியிருக்கும்போதுதான் அரக்கர்களின் அழிவு காலத்திற்கு முதற் செயல் தொடங்குகின்றது. இராவணன் தன் குலத்துடன் நாசமடைவதற்கு வேண்டிய வித்தும் இடப்பெறுகின்றது.

தன் குலத்துக்கே இறுதி காட்டக் கூடிய சூர்ப்பணகை அங்கு வருகின்றாள். பின்னால் பெரிதாக வளரக்கூடிய ஒரு மரம் அதன் விதையிலேயே சிறிய வடிவில் தோன்றி உறைவது போலவே தன் குலத்திற்கே நாசத்தை விளைவிக்க வல்ல சூர்ப்பணகை அரக்கர் குலத்தில் தோன்றி வசித்து வருகின்றாள். விதை முளைப்பதற்கு வேண்டிய ஈரம், காற்று, வெப்பம் ஆகியவை தக்க அளவில் கிடைத்தவுடன்

---

*பழநியாண்டவர் திருக்கோயில் குடமுழுக்கு விழா சிறப்பு மலரில் (1974) வெளிவந்தது.

விதையினுள்ளிருக்கும் குழந்தைச் செடி முளையாக வெளிப் படுதல்போல் சூர்ப்பணகையிடத்தும் அழிவு மரம் முளை விடத் தொடங்குகின்றது. சூர்ப்பணகையின் தன்மையைக் கம்பன்,

நீலமா மணிநிற நிருதர் வேந்தனை
மூலநா சம்பெற முடிக்கும் மொய்ம்பினள்
மேலைநாள் உயிரொடும் பிறந்து தான்விளை
காலம் ஓர்ந்(து) உடன்உறை கடிய நோயனள்[1]

[நிருதர் வேந்தன்-இராவணன்; மூலம் நாசம் பெற - வேரோடு (குலத்தோடு) அழிவை யடையும்படி; மொய்ப்பினள்-வலிமையுடை யவள்; மேலை நாள்-பிறந்த பொழுதே; தான் விளை நலம் ஓர்ந்து-தான் வெளிப்பட்டுப் பயன் விளைத்தற்குரிய காலத்தை எதிர் பார்த்துக் கொண்டு]

என்று காட்டுகின்றான். இராமனை இவள் பார்க்கும் போது இவனிடம் குடிக் கொண்டிருந்த காதல் நோய் வெளிப்பட்டு ஆறாக் கனல்போல் எரிகின்றது; இராட்சசக் காதல் இப்படித்தான் இருக்குமோ என்று சொல்லும்படி வளர்கின்றது. பலவிதமாக இராமனிடம் உரையாடிய பிறகு, சீதையிருக்கும்வரை தன்னை இராமன் விரும்பான் என்று எண்ணி அவள் தனிமையாக இருக்கும் அற்றம் பார்த்து அவளைத் தூக்கிக் கொண்டு போய் மறைத்து வைக்கும் எண்ணத்துடன் பர்ணசாலைக்கு வருகின்றாள் சூர்ப்பணகை. கண்ணைக்காக்கும் இமையெனக் காத்து நிற்கும் இளைய பெருமாள் அவளைக் காவல் புரிந்து வரு வதை அவள் அறியவில்லை. சீதையைத் தூக்க யத்தனிக் கையில், 'நில்லடி' என்று இலக்குவன் கடுகிவந்து, அவளது கூந்தலைச் சுற்றிப் பிடித்துக் கொண்டு அவளது வயிற்றில்

1. சூர்ப்பணகைப்-9

காலால் உதைக்கின்றான். உடனே சூர்ப்பணகை விண் வழியாகத் தன்னைத் தூக்கிச் செல்ல முயற்சி செய்யும் போது அவளை விரைவில் கீழே தள்ளி, உடைவாளை உருவி யெடுத்து,

'மூக்கும் காதும்வெம் முரண்முலைக்
 கண்களும் முறையால்
போக்கிப் போக்கிய சினத் தொடும்
 புரிகுழல் விட்டான்.[2]

[முலைக்கண்கள்- முலைக்காம்புகள்; முறையால்; ஒன்றன்பின் ஒன்றாக; போக்கி-அறுத்து-போக்கிய சினத்தொடும்-தணிந்த கோபத்துடன்; புரிகுழல்-சுற்றிப்பிடித்த கூந்தல்]

தன் குலத்தார்களையெல்லாம் நினைத்து நினைத்துப் புலம்புகின்றாள் சூர்ப்பணகை. அவ்விடத்திற்கு வந்த இராமனிடமும் முறையிடுகின்றாள். இலக்குவனையாவது தன்னை மணக்க ஏற்பாடு செய்யும்படி வேண்டுகின்றாள். ஒன்றும் பலிக்கவில்லை. இறுதியில் இராமலட்சுமணர்கள் இவளைக் கொல்ல நினைக்கின்றனர். இதையறிந்து அவள்,

காற்றினிலும் கனலினிலும் கடியானைக்
 கொடியானைக் கரனை உங்கள்
கூற்றுவனை இப்பொழுதே கொணர்கின்றேன்
 என்றுசலங் கொண்டு போனாள்.[3]

[கனல்-நெருப்பு; கூற்றுவன்-யமன்; சலங்கொண்டு-தணியாத முற்றின வைரங் கொண்டு]

அவ்வாறே பெருஞ்சேனையுடன் கரனும் அவன் தம்பி தூடணனும் வந்து இராமலட்சுமணர்களை எதிர்த்துக் குலத்தோடு மடிகின்றனர்.

---

2. சூர்ப்பணகைப்-94
3. ஷெ 143

சூர்ப்பணகை இலங்கைக்கு வருகின்றுள்; நடந்ததை யெல்லாம் தன் அண்ணனிடம் கூறுகின்றுள். தன்னை அங்கபங்கப் படுத்தினவர் மனிதர் என்றும், அவர்களுடன் உறையும் அழகுடை நங்கையைத் தூக்க முயன்றபோது இச்செயல் நேரிட்டது என்றும் கூறி மெதுவாக 'வத்தி' வைக்கின்றுள். சீதையின் அழகைப் பலவாறு விரித்துரைத்து இராவணனுக்குக் காம மயக்கத்தை ஏற்றி விடுகின்றுள்.

மஞ்சுஒக்கும் அளகம் ஓதி;
  மழைஒக்கும் வடித்த கூந்தல்
பஞ்சுஒக்கும் அடிகள் செய்ய
  பவளத்தின் விரல்கள் ஐய![4]
[மஞ்சு - மேகம்; ஓதி - கூந்தல்]

என்று வர்ணிக்கின்றுள்.

தோளையே சொல்லு கேனே
  சுடர்முகத்(து) உலவு கின்ற
வாளையேசொல்லு கேனே
  வல்லவை வாழ்த்து கேனே[5]

[சுடர் முகத்து உலவும் வாளை - வாளை மீன் போன்ற கண்கள்]

என்று கூறி மேலும் அவளது காம உணர்வைக் கிளர்ந்தெழச் செய்கின்றுள். இத்தகைய அவளை இராவணன் அநுபவிக்கும்பொருட்டுத் தான் தூக்க முயன்றபோது இலக்குவன் இவ்வாறு செய்து விட்டான் என்று முறையிடுகின்றுள்.

இராவணனுக்கு இவ்வாறு அவள் ஊட்டிய காம மயக்கம் உச்ச நிலையை அடைந்து விடுகின்றது. அவன் அனைத்தையும் மறந்து விடுகின்றுன்.

4. மாரீசன்வதைப்- 70
5. ஷை—73

கரனையும் மறந்தான்; தங்கை
　　மூக்கினைக் கடித்து நின்றான்
உரனையும் மறந்தாள்; உற்ற
　　பழியையும் மறந்தாள்; வெற்றி
அரனையும் கொண்ட காமன்
　　அம்பினால் முன்பு பெற்ற
வரனையும் மறந்தாள்; கேட்ட
　　மங்கையை மறந்திலாதாள்[6]

[தங்கை மூக்கை கடித்து நின்றான் - இலக்குவன்; உரன் - வலிமை; பழி - அபகீர்த்தி; அரனையும் வெற்றி கொண்ட காமன் அம்பு - மன்மத பாணம்; முன்பு பெற்ற வரன் - சிறந்த வர பலம்]

ஆனால் சீதையை மட்டும் மறக்கவில்லை. சீதை என்னும் பெயரும் அவள் மனமும் பிரிய முடியாதபடி ஒன்றாய்ப் போய் விடுகின்றது. சீதையின் உருவத்தை இதயமாகிய சிறையில் வைத்து விடுகின்றான்.

மயிலுடைச் சாய லாளை
　　வஞ்சியா முன்னம் நீண்ட
எயில்உடை இலங்கை நாதன்
　　இதயமாம் சிறையில் வைத்தான்[7]

[எயில் - மதில்]

என்று கம்பன் நமக்கு அறிவிக்கின்றான். மாயமானை ஏவி இராம லட்சுமணர்களைச் சீதையிடமிருந்து பிரித்து ஒரு முனிவர் கோலங் கொண்டு பர்ணசாலையுடன் பெயர்த்துக் கொண்டு சென்று வஞ்சனையாகச் சிறை வைப்பதற்கு முன்னமேயே இராவணன் மயில்போன்ற சாயலையுடைய

---

6. மாரீசன் வதை-83
7. ஷை 85

சீதாபிராட்டியைத் தனது மனமாகிய சிறையில் வைத்து விடுகின்றான். இவ்வாறு அவன் கொண்ட காதல்,

விதியது வலியி னானும்
மேலுள விளைவி னானும்
பதியுறுகேடு வந்து
குறுகிய பயத்தி னானும்[8]

[பதி - ஊர் (இலங்கை) கேடு - கெடுதல்; பயத்தி னாலும் - பயனாலும்]

கல்வி ஞானமில்லாத பேதை ஒருவன் மறைவாகச் செய்த தீவினை வளர்ந்து பிறர்க்குப் புலனாதல்போல முதலில் மனத்தில் நிலைத்தாலும் பின்பு ஐம்பொறிகளிலும் பரவி அது வெளிப்படலாயிற்று. நாளடைவில் அக்காதல் இராக்கத உருவத்தை அடைந்து விடுகின்றது. இவ்வாறு தனது குலத்துக்கே அழிவைத் தேடியதை வீடணன் நன்கு உணர்ந்திருக்கின்றான்: வேண்டுமென்றே, பழி தீர்க்கும் கருத்தினாலே, அழிவைத் தேடினானோ சூர்ப்பணகை என்று கூட ஐயப்படுகின்றான். இராவணன் இறந்த பிறகு சகோதர வஞ்சையால் புலம்பும் வீடணன்,

கொல்லாத மைத்துனனைக் கொன்றாய்(என்று)
அதுகுறித்துக் கொடுமை சூழ்ந்து
பல்லாலே இதழ்(அ)துக்கும் கொடும்பாவி
நெடும்பாரில் பழிதீர்ந் தாளோ?[9]

என்று சொல்லி அழும்போதுதான் இவ்வையப்பாடு வெளிப்படுகின்றது.

இராவணன் மனச்சிறையிலிட்ட காதலின் விளைவுகளை அளவிட்டுச் சொல்ல முடியாது.

---

8. மாரீசன் வதை-86

9. இராவணன் வதை-225

மீன்சுடர் விண்ணும் மண்ணும்
விரிந்தபோர் அரக்கர் என்னும்
கான்சுட முளைத்த கற்பின்
கனலி[10]

[*மீன்சுடர் விண்ணும் - வின்மீன்கள் விளங்கும் வானம்; மண் - பூமி; விரிந்த - பரவியுள்ள; கான்சுட - காடு எரிய*]

*யல்லவா சீதாப்பிராட்டி? வானத்திலும் பூமியிலும் எங்கும் பரவியுள்ள இராக்கதர்களாகிய காட்டை அழிப்பதற்காகத்தானே சீதை தோன்றியிருக்கின்ருள்? அவளை அடையவேண்டும் என்ற எண்ணத்தால் மாரீசனை மாய மான் உருக்கொண்டு செல்லும்படி ஏவி, இராமலட்சுமணர்களைச் சீதையிடமிருந்து பிரிக்கின்ருன் இராவணன். தான் முனிவர் கோலத்துடன் சென்று, சீதையைப் பர்ண சாலையுடன் பெயர்த்து எடுத்துக் கொண்டு ஏகி அசோகவனத்தில் அரக்கியர் நடுவே சிறை வைத்து விடுகின்ருன். அரக்கர்களை அழிப்பான் வேண்டி கற்புக்கனலே இலங்கைக்கு வந்து விடுகின்றது. நெருப்புடன் விளையாடுகின்ருேம் என்பதை இராவணன் சிறிதும் சிந்தித்துப் பார்க்கவே இல்லை.*

*சீதையாகிய நெருப்பு இலங்கையிலிருப்பதால். விரைவில் அந்நகர் எரிந்து சாம்பலாகி விடும் என்று அநுமன் காட்ட நினைக்கின்ருன். தான் தூது வருங்கால் சீதையைத் தேற்றுவதற்காகச் சில செய்திகள் கூறும்போது,*

வினையுடை அரக்கராம்
இருந்ததைத் வெந்துகச்
சனகி யென்(று) ஒருதழல்
நடுவன் தங்கலால்

10: சூர்ப்பணகைப்—58

அனகன்கை அம்பெனும்
　　அளவில் ஊதையால்
கனகநீ(டு) இலங்கை(நின்று)
　　உருகக் காண்டியால்[11]

[வினை – கொடுந்தொழில்; இருந்தை-கரி; தழல் - நெருப்பு; அனகன் - குற்றமற்ற இராமன்; ஊதை- பெருங்காற்று; நீடு இலங்கை கனகம்– பெரிய இலங்கையாகிய பொன்; காண்டி- பார்ப்பாய்]

என்று குறிப்பிடுகின்றான். கொடுந்தொழிலுடைய இராக்கதர்களாகிய கரியின் நடுவே சீதையாகிய நெருப்பு தங்குவதனால், குற்றமற்ற இராம பிரானுடைய அம்பாகிய காற்றின் உதவியால் பொன் மயமான இலங்கை உருகு வதைச் சீதை காணப் போகின்றாள் என்று அநுமன் குறிப் பிடும்போது, சீதையை அநுமனும் 'கற்பின் கனலியாக' வல்லவோ கொள்ளுகின்றான்?

மண்டோதரியும் வீடணனும் கற்பினுக் கரசியாகிய சீதையை நஞ்சாகக் கொள்ளுகின்றனர். இலக்குவன் அம்பால் இந்திரசித்து பட்டழிகின்றான். இராவணன் புத்திர சோகத்தால் புலம்பிச் சென்ற பிறகு மண்டோதரி மைந்தன் உடல்மீது விழுந்து கொண்டு பற்பலவாகப் புலம்புகின்றாள். பஞ்சிலே தீப்பற்றினாற்போல அரக்கர் சேனைகள் யாவும் மனிதர்களால் அழிந்து கொண்டேயிருக் கின்றனவென்று சொல்லி அரற்றுபவள்,

'அஞ்சினேன் அஞ்சி னேன்அச்
　　சீதையென்(று) அமிழ்தில் தோய்ந்த
நஞ்சினால் இலங்கை வேந்தன்
　　நாளைஇத் தகையன் அன்றோ?'[12]

11. சூளாமணி-53
12. இராவணன் சோகம்-53

என்று சொல்லி அழுகின்றாள். சீதை மண்டோதரிக்கு அமிழ்தத்தில் தோயப்பெற்ற நஞ்சாகவல்லவா காட்சி யளிக்கின்றாள்? இன்று தன் மகனுக்கு நேர்ந்த கதிதானே நாளைக்குத் தன் கணவனுக்கும் நேரிடப்போகின்றது என்றல்லவோ அஞ்சுகின்றாள்? என்ன செய்வது?

மண்டோதரி அஞ்சியவாறே இலங்கை வேந்தனும் இராமன் செலுத்திய மலரவன் அம்பால் மடிந்து விடு கின்றான். இதனைக் கம்ப நாடன்,

முக்கோடி வாழ்நாளும் முயன்றுடைய
பெருந்தவமும் முதல்வன் முன்னால்
எக்கோடி யாராலும் வெலப்படா
எனக்கொடுத்த வரமும் ஏனைத்
திக்கோடும் உலகனைத்தும் செருக்கடந்த
புயவலியும் தின்று மார்பில்
புக்கோடி உயிர்பருகிப் புறம்போயிற்(று)
இராகவன்றன் புனித வாளி [13]

[முதல்வன் - பிரமன்; செருக் கடந்த - போரினால் வென்ற; புயவலி-புஜபலம்; புக்குஓடி-புகுந்து ஓடி; புறம்-வெளியே; புனிதவாளி-பரிசுத்த மான அம்பு]

என்று நமக்கு அறிவிக்கின்றான். பகைமையை விட்டுத் தமயனுக்கு ஈமக் கடன் செய்யும்படி வீடணனை இராமன் ஏவ, அவனும் ஒரு மலையின்மீது மற்றொரு மலை வீழ்ந்தது என்று சொல்லும்படி இராவணன் உடலின்மீது வீழ்ந்து புலம்புகின்றான்.

"உண்ணாதே உயிர்உண்ணா(து) ஒருநஞ்சு
சனகியெனும் பெருநஞ்(சு) உன்னைக்
கண்ணாலே நோக்கவே போக்கியதே
உயிர்நீயும் களப்பட் டாயே" [14]

13. இராவணன் சோகம்-53
14. இராவணன் வதைப்-220

என்று சொல்லிப் புலம்புகின்றான். 'உட்கொள்ளாமல் ஒரு நஞ்சு உயிரைக் கொல்ல மாட்டாது. அதற்கு மாறாகச் சானகி என்ற பெரு நஞ்சு உன்னைக் கண்ணாலே நோக்கிய மாத்திரத்தில் உன்னுயிரைப் போக்கி விட்டதே! நீயும் போர்க்களத்தில் உயிரொழிந்து கிடக்கின்றனையே!' என்றல்லவோ சொல்லி அழுகின்றான்? சீதையை நஞ்சாக அன்றோ வீடணன் கருதியிருக்கின்றான்? போர் தொடங்குவதற்கு முன்னர் இராவணன் மந்திராலோசனை செய்த போதுகூட இவ்வீடணன் சீதையை நஞ்சாகத்தான் பாவித்திருந்தான்; கும்பகருணன்கூட இக்கருத்தையே கொண்டிருந்தான். மந்திராலோசனையின்போது தான் எடுத்துக் காட்டிய உண்மையை 'இப்போதாவது அறிந்து உணர்ந்திருப்பாயோ?' என்று எண்ணுகின்றான் விபீடணன்.

ஓராதே ஒருவன்றன் உயிராசைக்
  குலமகள்மேல் உற்ற காதல்
தீராத வசையென்றேன் எனைமுனிந்த
  முனிவுஆறித் தேறி னாயோ?[15]

[ஓராது-ஆராய்ச்சியின்றி; உயிராசை குலமகள்-உயிர் போனால் விருப்பிற்குரிய குடிப் பிறந்த பெண்; வசை-பழி; முனிவு-கோபம்]

'ஆராய்ச்சியின்றி ஒருவனுடைய உயிர் போன்ற உயர் குடிப் பிறந்த பெண்ணிடத்துப் பொருந்திய காதல் தீராத பழியை விளைவிக்கும் என்று கூறினேனே. அப்போது என் மீது காட்டிய சினம் இப்போதாவது தணிந்து அவ்வுண்மையை அறிந்தாயோ?' என்றல்லவோ சொல்லியிருக்கின்றான் விபீடணன்.

போர்மகளைக் கலைமகளைப் புகழ்மகளைத்
  தழுவியக்கை பொறுமை கூரச்
சீர்மகளைத் திருமகளைத் தேவர்க்குந்
  தெரிவரிய தெய்வக் கற்பின்

---

15. இராவணன் வதைப்-221

பேர்மகளைத் தழுவுவான் உயிர்க்கொடுத்துப்
பழிகொண்ட பித்தா பின்னைப்
பார்மகளைத் தழுவினையோ திசையானை
பணையிறுத்த பணைத்த மார்பால்[16]

[போர் மகள்-வெற்றித் திருமகள்; கலைமகள்—நாமகள்; புகழ் மகள்—கீர்த்தி மகள்; சீர் மகளைத் திருமகளை-சிறப்பு பொருந்திய மகளான இலக்குமி; தெரிவரிய-உணர்த்தற் கரிய; பேர் மகள்-புகழ் பெற்ற சீதா பிராட்டி; பித்தா-காமப் பித்தனே; பார் மகள்-பூமிதேவி; இறுத்த-முறித்த; பணைத்த பருத்த]

என்று சொல்லிப் புலம்பும்போதுதான் வீடணின் துக்கம் உச்ச நிலையை அடைகின்றது. 'பைத்தியக்காரத்தனமாக கற்புக் கனலியைத் தழுவ நினைத்து இப்போது மண் மகளை யல்லவோ தழுவி நிற்கின்றாய்?' என்று விடணன் கூறும் போது சோகத்தின் கொடுமுடியைக் காண்கின்றோம்.

பிறகு இராவணன் உடல் கிடந்த இடத்திற்கு மண்டோதரி வருகின்றாள். அலைகளையுடைய கடலிலே மின்னல் வீழ்ந்தார்போலப் பொருந்தி விழுகின்றாள். கைலாய மலையையே தூக்கி எடுத்த அழகிய உடல் எள் இருப்பதற்குக் கூட இடம் இல்லாமல் துளைக்கப்பட்டிருக் கும் நிலையினைக் காண்கின்றாள். 'சீதாப் பிராட்டியைக் குறித்து மனமாகிய சிறையில் ஒளித்து வைத்திருக்கும் காதல் இருக்கும் இடம் எங்கே? எங்கே? என்று தேடுவதற் காகத்தானா இவ்வாறு சல்லடைக் கண்களாகத் துளைத் திருக்கின்றது?' என்று எண்ணுகின்றாள். அப்படியே சொல்லி மரங்களும் மலைகளும் உருகுமாறு வாய்விட்டு அழுது புலம்புகின்றாள். அவள் புலம்புவதைக் கம்பன்,

16. இராவணன் வதைப்-226

வெள்எருக்கம் சடைமுடியான் வெற்புஎடுத்த
 திருமேனி மேலும் கீழும்
எள்இருக்கும் இடம்இன்றி உயிர்இருக்கும்
 இடம்நாடி இழைத்த வாறோ?
கள்இருக்கும் மலர்க்கூந்தல் சானகியை
 மனச்சிறையில் கரந்த காதல்
உள்இருக்கும் எனக்கருதி உடல்புகுந்து
 தடவியதோ ஒருவன் வாளி?[17]

[வெள் எருக்கம் சடை முடியான்-சிவபெருமான்; வெற்பு-மலை; இழைத்தவாறோ-தேடிச் செய்த வகையோ; கள்-தேன்; ஒருவன்-ஒப்பற்ற இராமன்; வாளி அம்பு]

என்று காட்டுகின்றான். பஞ்சவடியில் கண்ட சீதையைக் குறித்துச் சூர்ப்பணகை ஊட்டிய காம மயக்கத்தால் சீதையின்மேல் இராவணன் 'மனச் சிறையில் வைத்த காதலை' இராமன் விட்ட மலரவன் படை துருவித் துருவித் தேடி விடுதலை செய்திருப்பதைக் கம்பநாடன் நமக்குக் காட்டுகின்றான். இலங்கை நாதன் இதயமாம் சிறையில் வைத்தக் காதலைத் தேடித்தான் இராவணனுடலை இராமன் அம்பு சல்லடைக் கார்களாகத் துளைத்திருக்கின்றது என்று எவரும் ஒருகால் நினைக்கலாம் என்று காட்டுவதற்காகவே, கம்பன் மண்டோதரியை இராமன் அம்பு 'சானகியை மனச் சிறையில் கரந்த காதல் உள்ளிருக்கும் எனக் கருதித் தடவியதோ?' என்று புலம்பிப் பேசும்படிச் செய்கின்றான். சிறை வைத்த காதல் வெளிப்பட்ட விதத்தைக் கவிஞன் காட்டுவது பன்முறை சிந்தித்துப் பாராட்டி மகிழ்வதற் குரியதாகும்.

---

16. இராவணன் வதைப்-239

# 9. கவி நாயகன்

அரக்கர் பாவத்தாலும், அல்லவர் இயற்றிய அறத்தாலும், தூமொழி மடமான் கேகய மாதுவின் இரக்கமின்மையாலும் இன்று உலகினோர் இராமனது தொல்புகழ் அமுதினைப் பருகி வருகின்றனர். இராம காதை என்னும் காவிய அரங்கினுள் வரும் காவிய மாந்தர்களுள் கவிக்கு நாயகனாகிய அநுமன் வரலாறு பெருஞ் சிறப்புடையதாய்ப் பேரொளி வீசி நிற்கின்றது. காவியத்திற்கே முதுகெலும்பு போன்றவன் மாருதி. கவிநாயகனாகிய கம்பநாடன்,

''ஓர்
ஆணியாய் உலகுக்கு எல்லாம்
அறம்பொருள் நிரப்பும் அண்ணல்.[1]

என்று இராமதூதனை நமக்கு அறிமுகம் செய்து வைக்கின்றான். உலகில் அறத்தை அறக்கெடுத்து அலைக்கும் இராவணன் முதலிய அரக்கர்கள் அழிந்தொழிவதற்கு இவ்வநுமன் தூது செல்வதே முக்கிய காரணமாக நிற்ற

1. சுந்தர கடல் தாவு-27

லால், இவனை, 'ஆணியாய் உலகுக்கு எல்லாம் அறம் பொருளை நிரப்பும் அண்ணல்' என்று சிறப்பித்தான் கவிஞர் கோமான். அறம் என்ற பொருள் தழைப்பதற்கு அநுமனே முதற்காரணன் என்பது கவிஞனின் குறிப்பு. பூவினை அதன் மணம் சிறப்பித்தல்போல் இராமகாவியத்தை அநுமன் சிறப்பிக்கின்றான். அவனது பேராற்றலும், அடலாண்மையும், சாதுரியப் பேச்சும், தூதின் சிறப்பும், ஏனைய குண நலன்களும் இராமகாதையைப் பயில்வார்க்குப் பேரின்பம் பயப்பனவாகும். இராம காதையில் இராமனது புகழினை ஆரா அமுதமாகச் சீராட்டி வளர்த்த பெருமை மாணி வடிவமாகவுள்ள வாயு புத்திரனைத்தான் சாரும் என்று கூறுவது எள்ளளவும் மிகையன்று.

இத்தகைய சீரும் சிறப்பும் மிக்க அஞ்சனைக்குமரனைக் கம்பன் பல அழகிய சொற்றொடர்களால் சிறப்பித்துப் பாராட்டுகின்றான். கிட்கிந்தா காண்டம் மராமரப் படலத்திலிருந்து காவியம் நிறைவுபெறும் வரையிலும் கவி நாயகனது சிறப்பைக் கவிநாயகன் ஆங்காங்கு குறிப்பிட்டுச் செல்லுகின்றான். சந்தர்ப்பங்களுக்கேற்றவாறு அநுமனது குணநலங்கள் கனிந்து மணம் வீசுகின்றன. சுந்தரகாண்டம் முழுவதிலும் காவியநாயகனாகிய சக்கரவர்த்தித் திரு மகனின் அழகும் 'அகலகில்லேன் இறையும்' என்று கூறி அவளுடன் காடுறை வாழ்க்கையை விரும்பிப் போந்த சீதாப் பிராட்டியின் அழகும் இனிது நுவலப்பெற்றிருப் பினும் சிறிய திருவடியாகிய அநுமனது புகழும் இடைப் பிறவரலாக ஓங்கி நிற்பதைக் கண்டு மகிழலாம்.

செவிக்குத் தேனென இராகவன்
 புகழினைத் திருத்தும்
கவிக்கு நாயகன்.[2]

என்று கம்பநாடன் அநுமனைக் குறித்துச் செல்வதைக் காணலாம். இந்தச் சுவையான இனிய கவிதைப் பகுதி

2. சுந்தர. ஊர்தேடு—132

யினை எண்ணும்போது கம்பனைச் சுவைத்துத் தேக்கிட்ட நம் மனக்கண் முன்பு எண்ணற்ற காட்சிகள் தோன்றுகின்றன. அவற்றிற்கு வரி வடிவு தரின் அஃது ஒப்பற்ற ஓர் ஆராய்ச்சி நூலாக விரிந்து செல்லும். இராகவன் புகழினைச் செவிக்குத் தேனாக இனிக்கும் வண்ணம் திருத்திய பெருமையை இரு கவிநாயகரிடத்திலும் கண்டு களிக்கலாம். வான்மீகத்தி லுள்ள வரலாறுகளில் சிலவற்றைத் திருத்தி தமிழர்களின் மரபுக்கும் நாகரிகத்திற்கும் ஏற்றவாறு இராமகாதையை அமைத்த பெருமை கவிநாயகனாகிய கம்பனுக்கு உரியது. இராமனது காடுறை வாழ்கையின் வரலாற்றில் நேர்ந்த சில பேராபத்துகளை நீக்கி அதனைச் செம்மையாக மாண் புறுத்திய பெருமை கவிநாயகராகிய வாயுபுத்திரனைச் சாரும். முன்னதைவிட்டுப் பின்னதில் நம் கருத்தினைச் செலுத்துவோம். காடுறை வாழ்க்கைக் காலத்தில் இராமனது வரலாற்றில் எழுந்த கோணல்கள் எவை என்பதையும் அவற்றை நிமிர்த்தின அநுமனின் திறத்தினை யும் ஈண்டுக் களிப்போம்.

முதலாவது: சீதாப் பிராட்டி பல திங்கள்களாக அரக்கியர்களால் நெருக்குண்டு மிகவும் 'மென் மருங்குல் போய் வேறுள அங்கமும் மெலிந்து' கிடக்கின்றாள். புலிக் குழாத் தகப்பட்ட மானிளம் பேடைபோல், கண்களிமைத் தலையும் முகிழ்த்தலையும் துறந்து, வெயிலிடைத் தந்த விளக்கென ஒளியிலா மெய்யுடன் விளங்குகின்றாள்.

விழுதல் விம்முதல் மெய்யுற
வெதும்புதல் வெருவல்
எழுதல் ஏங்குதல் இரங்குதல்
இராமனை எண்ணித்
தொழுதல் சோருதல் துளங்குதல்
துயருழந்து உயிர்த்தல்
அழுதல் அன்றிமற் றயலொன்றும்
செய்குவது அறியார்[3]

3. சுந்தர. காட்சி—5

இங்ஙனம் அலமந்து இருந்துகொண்டே 'சுருதி நாயகன் வரும் வரும் என்பதோர் துணிவால்' எண் திசைகளிலும் தன் பார்வையைச் செலுத்தி நிற்கின்றான். இங்ஙனம் பிராட்டி அசோகவனத்தில் இருக்கும் நிலையைக் கம்பன்,

> தேவு தென்கடல் அமிழ்ந்துகொண்
> டாங்கவேள் செய்த
> ஓவி யம்புகை யுண்டாதே
> ஒக்கின்ற உருவாள்.[4]
>
> [தேவு - தெய்வத் தன்மையுள்ள; அனங்கவேள் - மன்மதன்.]

என்று அழகுறக் காட்டுவான், சுந்தர காண்டத்தின் காட்சிப் படலத்தில் இப்பகுதிகள் மிக உருக்கமாய் அமைந்துள்ளன. இந்நிலையில் இராவணன் பலவித விருதுகளுடன் பிராட்டியிருக்குமிடம் வந்து பலவிதமாகப் பேசித் தன் கருத்தை முற்றுவிக்குமாறு வேண்டியதையும், பின்னர் இலங்கை வேந்தன் ஆணைப்படி அரக்கிமார் பலவாறு பயமுறுத்தியதையும், திரிசடை பிராட்டியாரைத் தேற்றியதையும் மரத்தின்மீது மறைந்து நிற்கும் அநுமன் காண்கின்றான். பிறகு மந்திர வலியால் அரக்கிமார்களை உறங்கச் செய்கின்றான். அவர்கள் உறங்கவே, சீதாப்பிராட்டி சந்திரனையும் இரவையும் இருளையும் பூங்கொடிகளையும் பலவாறாக விளித்துப் புலம்புகின்றாள். சென்ற நிகழ்ச்சிகளையெல்லாம் மனத்திற் கொண்டுவந்து அசை போடுகிறாள். நஞ்சனையான் அகம் புகுந்தமைக்கு நைந்து நைந்து'மருந்தும் உண்டுகொல் யான் கொண்ட நோய்க்கு' என மயங்குகின்றாள்.

> பொறையிருந் தாற்றியென்
> உயிரும் போற்றினேன்
> அறையிருங் கழலவன்
> காணும் ஆசையால்[5]

4. சுந்தர. காட்சி—5
5. ௸ உருக்காட்டு—11

[பொறை-பொறுமை: அறை-ஒலிக்கின்ற]

என்று பேசுகின்றாள். இராமன் தன்னை மீட்ட பிறகு 'இற்புகத் தக்கலை' என்று கூறினால் தன் கற்பு நிலையை எங்ஙனம் காட்டி மெய்ப்பிப்பது என ஏங்குகின்றாள்.

ஆதலால் இறத்தலே அறத்தின் ஆறெனாச்
சாதல்காப் பவரும்என் தவத்தின் சாம்பினார்
ஈதலாது இடமும்வேறு இல்லை என்று ஒரு
போதுலா மாதவிப் பொதும்பர் எய்தினாள்.[6]

[ஆறு-வழி; தவம்-நல்வினை; சாம்பினார்-உறங்கினார்; பொதும்பர்-தோப்பு]

இங்ஙனம் பிராட்டி தன்னை முடித்துக் கொள்ள முயலும் தருணத்தில் இராம நாமத்தைச் சொல்லித் தன்னை அண்டர் நாயகன் தூதன் என்று கூறி அவளது செயலைத் தடுத்து நிறுத்துகின்றான் அநுமன். அங்ஙனம் அநுமன் உற்ற சமயத்தில் செயத்தக்கதைச் செய்யாதிருப்பின் பிராட்டியார் நிலை என்ன ஆயிருக்கும் என்பதை நாம் அறிவோம். இராமனது பரக்கும் தொல் புகழும் அழிந்து பட்டிருக்கும். இங்ஙனம் அழியாது முதற்கோணலை நிமிர்த்தின பெருமை அஞ்சனைச் சிறுவனைச் சாரும்.

இரண்டாவது: இந்திரசித்து தொடுத்து விடுத்த அரவக்கணையால் அல்லோலகல்லோலப் பட்டுப் போயிற்று வானரச் சேனை. இலக்குவனும் நாகபாசத்தால் கட்டுண்டு கிடக்கின்றான். வீடணன் புலம்புகின்றான்; இராமனும் சோர்வுற்றுப் பேசாத நிலையை அடைகின்றான். ஆயின் இந்த அவல நிலையெல்லாம் கருடன் வரவால் மாறிவிடுகின்றது. வானரசேனையினிடையே ஆரவாரம் கிளம்புகின்றது. படைத் தலைவர்களைப் போருக்கு அனுப்புகின்றான் இராவணன். அவர்களும் அழிந்து படுகின்றனர்.

---

6. சுந்தர. உருக்காட்டு—21

அடுத்து, இராவணன் அநுமதி பெற்று கரன்புதல்வன் மகரக்கண்ணன் போர் அரங்கில் தோன்றுகின்றான். அவனும் இராமனது கணையால் மாய்ந்தொழிகின்றான். மீண்டும் இந்திரசித்து போர் அரங்கில் தோன்றுகின்றான். இம் முறையும் கடும்போர் நிகழ்கின்றது. இந்திரசித்து விண்ணில் மறைந்து மலரவன் படையை ஏவுகின்றான். அதன் விளைவால் உணர் வொடுங்கி 'ஆடல் மாகரி சேவகம் அமைந்தேன்' அயர்ந்து போகின்றான். அநுமனும் சோர்ந்து வீழ்கின்றான். அருக்கன் மகன், வாலி காதலன், நீலன் இடபன் பனசன் குமுதன் முதலிய வானர வீரர்கள் உயிர்துறக்கின்றனர். இங்ஙனம் இறந்து பட்ட வீரர்களை யெல்லாம் கண்ட இராமன் பெருந்துயருறுகின்றான். தம்பியின் நிலையைக் கண்டு உளம் துடித்து உயிர் பதைத்து ஒன்றும் பேசாது தன்னை மறந்து துயில்கின்றான். அரக்கர்கள் இலங்கையில் வெற்றி விழா கொண்டாடு கின்றனர்; இந்நிலையில் வீடணன் அநுமன்மீதுள்ள அம்பு களைக் களைந்து அவனுடைய அயர்ச்சியைப் போக்குகின்றான். அடுத்து, சாம்பவன் மூலம் உயிர் பிழைப்பிக்கும் சஞ்சீவி மருந்தினை அறிகின்றனர். சாம்பவானே மருந்திருக்கும் இடத்தைக் கூறி அதற்கு வழியையும் கூறுகின்றான். அநுமனும் பேருருவம் கொண்டு விரைந்து சென்று மருந் திருக்கும் மலையையே கொணர்ந்து விடுகின்றான். யாவரும் உயிர் பெற்றெழுகின்றனர். இராமன் துயரம் நீங்கப் பெற்று தூயகாதல் நீர் துளங்கு கண்ணொடு தாயினன் பினனாகிய மாருதியைத் தழுவி உழுவலன்பு கனிந்த அருமை மொழிகளைக் கூறுகின்றான்.

முன்னிற் றோன்றினோர் முறையின் நீங்கலாது
என்னிற் றோன்றிய துயரின் ஈறுசேர்
மன்னிற் றோன்றினோம் முன்னம் மாண்டுளோம்
நின்னிற் றோன்றினோம் நெறியில் தோன்றினாய்

அழியுங் காற்றரும் உதவி ஐயனே
மொழியும் காற்றரும் உயிரின் முற்றுமே

பழியும் காத்தரும் பகையும் காத்துஎமை
வழியும் காத்தனை மறையும் காத்தனை[7]

"நன்னெறியில் விளங்கும் நாவலனே, நானும் எம்பியும் தசரதன் மக்களாய் முன்பு பிறந்தோம்; இன்று நான்முகன் படையால் துஞ்சினோம்; இப்போது உன் மக்களாய்ப் பிறந்துளோம்; உயிர்போகும் காலத்தில் பிரிந்த உயிரானது, தருகின்ற உயிரினால்தான் ஈடு செய்ததாகுமா? எங்கட்கு உயிர் கொடுத்து எம்மைச் சூழ இருந்த பழியினைத் தடுத்து, அரிய பகைவரையும் அழித்திடும்படி அடக்கி, எம்மைக் குலத்தோடு காத்தாய். நாங்கள், உனக்கு என்ன கைம்மாறு செய்யப் போகின்றோம்" என்று இராமன் உள்ளம் உருகப் பேசுகின்றான். அந்த அருமை மொழிகள் இருவருடைய நிலைமைகளையும் இனிது விளக்கி இன்பம் சுரந்து நிற்கின்றன. இங்ஙனம் இராமன் வாழ்வில் நேர்ந்தஇரண்டாவது கோணலை நிமிர்த்தினான் கவிநாயகன்.

மூன்றாவது; வீணைக் கொடியோனை வீழ்த்தி மிதிலைச் செல்வியை மீட்டிக் கொண்டு இராமன் அயோத்திக்கு மீண்டும் வருங்கால், இடையே பரத்துவாசரது ஆச்சிரமத்தில் தங்க நேர்டுகின்றது காடுறை வாழ்க்கையின் தொடக்கத்தில் கொடுத்த வாக்கினையொட்டி முனிவரின் விருந்தினனாகத் தங்கி விடுகின்றான். எல்லோரும் விருந்துண்ணத் தொடங்குங்கால் விரைசெறி கமலக் கண்ணன் அநுமனை விளித்துச் சொல்லுகின்றான்:

இன்று நாம்பதி வருதுமுன்
மாருதி! ஈண்டச்
சென்று தீதின்மை செப்பிஅத்
தீயவித்து இளையோன்
நின்ற நீர்மையும் நினையும்நீ
தேர்ந்து எம்மின் நேர்தல்
நன்று.[8]

7. யுத்த. மருத்துவை—111, 112
8. யுத்த. மீட்சி—202

என்று இராகவன் கூறியதைக் கேட்டு அநுமனும் கணையாழியைக் கைக் கொண்டு தந்தை வேகமும் தனது நாயகனது தனிச்சிலையினின்று புறப்படும் அம்பின் வேகமும், தனது மனோவேகமும் பின்னிடும்படி விரைவாகச் சென்று, இராமன் வருகையை வழிமீது விழிவைத்துக் காத்திருந்த குகப்பெருமானுக்குச் சேயோன் வந்த வாசகத்தைக்கூறி வான்வழிச் செல்லுகின்றான். பதினான்கு ஆண்டுகள் முடிந்தும் இராமன் வரவில்லையே என்று தீ மூட்டி அதில் விழுவதற்குத் தயாராக இருந்த பரதன் முன் குன்றுபோல் நெடுமாருதி சென்று.

ஐயன் வந்தனன் ஆரியன் வந்தனன்
மெய்யின் மெய்யன்ன நின்றுயிர் வீட்டினால்
உய்யு மேயவன் என்றுரைத் துட்புகாக்
கையி னால்எரி யைக்கரி யாக்கினான்.[9]

[வீட்டினால்—ஒழிந்தால்]

"தலைவனான இராமன் வந்தான்; பெரியோன் வந்தான். உண்மை தவறாத உன் உயிர் ஒழிந்தால் இராமன் உயிர் வாழ்வானா?" என்று உரைத்து கூடிய கூட்டத்துட் புகுந்து நெருப்பைப் பிசைந்து அவித்துக் கரியாக்குகிறான். இங்ஙனம் மாருதி உற்ற சமயத்தில் வந்து எரியை அவியாதிருப்பின் பரதனின் நிலை யாதாயிருக்கும்! இறந்து போயிருப்பானன்றோ? இதனைக் கண்ணுறும் இராமன் முதலிய அனைவரும் அத்துயர் தாங்காது பரதன் வழியையே பின் பற்றியிருப்பர். அவ்வித முடிவு ஏற்படுமாயின் இராமசரிதமும் வேறு விதமாயிருக்கும். இராகவன் புகழும் இனித்திராது.

இவ்வாறு புகழ்மணக்கும் இராமகாதையின் இடையே புகுந்த மூன்று கோணல்களையும் நிமிர்த்திச் செப்பஞ் செய்த பெருமை அநுமனைச் சார்ந்துள்ளதனால், கவிக்கு

9. யுத்த. மீட்சி—240

நாயகனுகிய கம்பர் பெருமான் கவிநாயகனுகிய அநுமனைச் 'செவிக்குத் தேனென இராகவன் புகழினைத் திருத்தும் கவிக்கு நாயகன்' எனச் சுவையாகச் சுட்டியுரைத்தனன். 'கவிக்கு நாயகன்' 'கவிநாயகன்' என்ற அருமையான இரண்டு சொற்றொடர்களும் கம்பனையும் மாருதியையும் குறிப்பதை அறிந்து மகிழ்கின்றோம். இவை இரண்டும் படிப்போரின் சிந்தையில் தேன்பிலிற்றும் சிறப்பான சொற்றொடர்களாக நின்று சிந்தைக்கும் செவிக்கும் இன்னமுது ஊட்டி நிற்பதையும் உணர்கின்றோம்.

# 10. கம்பன் காட்டும் மேழிச் செல்வம்*

பன்னெடுங்காலமாகவே நம் நாடு உழவுத் தொழிலில் தலைசிறந்து விளங்கிய நாடாகும். இதுபற்றியே தமிழ் மூதாட்டியராகிய அவ்வையார் "மேழிச் செல்வம் கோழை படாது"[1] என்று கூறிப் போந்தார். புறநானூற்றுப் புலவரும் நம் நாட்டு வளத்தை,

> "ஒருபிடி படியும் சீறிடம்
> எழுகளிறு புரக்கும் நாடுகிழ வோயே"[2]

என்று புலப்படுத்தியுள்ளார். ஒரு பெண் யானை படுத் துறங்கும் சிறிய இடத்தில் விளையும் விளைபொருள்கள் ஏழு ஆண் யானைகட்குப் போதுமான அளவு விளைந்தன என்பதாக நிலவளத்தைக் குறிப்பிட்டுள்ளார். இங்ஙனம் பண்டு புலவர்களால் புகழ்ந்து பாடப்பெற்ற நாட்டில் இன்று எங்ஙனம் உணவுபற்றுக் குறை தலைவிரித்தாடுகின்றது? உணவுப் பங்கீட்டு முறை, வெளிநாடுகளிலிருந்து உணவுப் பொருள்களை இறக்குமதி செய்தல், அந்நாடுகளினின்றும் இலவச உணவுப் பொருள்களைப் பெறுதல், உணவுப்

---

*திரு A. S. S. S. சங்கரபாண்டிய நாடார் முத்து விழா மலரில் (1968) வெளிவந்தது

1. கொன்றைவேந்தன் - 77

பெருக்கத் திட்டம் இவை அன்றாடப் பிரச்சினைகளாகி விட்டன. தாம் இதுகாறும் மேற்கொண்ட தவறான கொள்கைகளைத் திருத்திக் கொள்ளாது இவைபற்றி அரசினர் முழக்கம் செய்து வருகின்றனர். இத்தகைய அவல நிலைக்குக் காரணம் என்ன? மக்கள் தோகைப் பெருக்கம், மேழிச் செல்வத்தில் தக்க கவனம் செலுத்தாமை, அரசினர் கொள்கைகளில் உள்ள குறைபாடுகள் இன்னோ ரன்னவையே காரணங்களாகும். 'வன மஹோத்ஸவம்' 'ஏர்முனை விழா' போன்ற விழாக்களைக் கொண்டாடுவதால் யாதொரு பயனும் விளையப் போவதில்லை. வாணிகத்திற்குப் பொருத்தமான விளம்பரத் திட்டங்களை உணவுப் பெருக் கத்திற்காக அரசினர் மேற்கொள்வது வருத்தத்தை விளை விக்கின்றது. இந்நிலையில் கம்பன் கூறும் மேழிச்செல்வத் தைப் பற்றி ஆராய்தல் மிகவும் பொருத்தமாகும்.

கம்பன் தமிழக வளத்தைக் கண்டு கோசலநாட்டு வளத்தைப் பேசுகின்றான். இந்த நாட்டில் அரிய பொருள்கள் மிகுதியாக விளைதலால் அவற்றில் வேண்டியன போக எஞ்சியவற்றை வேற்று நாட்டிற்கு மரக்கலங்கள் ஏற்றிச்சென்று அங்கு இறக்கிய பிறகு அந்த மரக்கலங்கள் அப்பாரத்தைச் சுமத்தலாகிய வருத்தத்தைச் நெய்தல் நிலத்தில் ஆற்றிக் கொள்கின்றனவாம்.

''முறையறிந்து அவாவை நீக்கி
முனிவழி முனிந்து வெஃகும்
இறையறிந்து உயிர்க்கு நல்கும்
இசைகெழு வேந்தன் காக்கப்
பொறைதவிர்ந்து உயிர்க்கும் தெய்வப்
பூதலந் தன்னின் பொன்னின்
நிறைபரம் சொரிந்து வங்க
நெடுமுதுகு ஆற்றும் நெய்தல்''[3]

2. புறம்-40
3. பலகாண். நாட்டுப்-19.

[முறை-நீதி; முனிவு-சினம்; வெஃகும்-விரும்பும்; இசை-புகழ்; பொறை-பாரம்: உயிர்க்கும்-இளைப்பாறும்; பூதலம்-பூமி; பொன்னின்நிறை பரம்-அரிய பொருள்கள் நிறைந்த பாரம்]

என்பது கவிஞனின் வாக்கு.

செங்கோல் மன்னன் அரசு செய்வதால் பாவம் நிரம்புதலினாகிய சுமை நீங்கி இளைப்பாறி நிற்கும் பூமி மரக்கலத்திற்கு உவமையாக வந்துள்ளமை அறிந்து மகிழத்தக்கது, இத்தகைய பொருள்களை வண்டுகள் பல மலர்களிடத்துச் சென்று மதுவைக் கொணர்ந்து ஓரிடத்திற் சேர்ப்பது போல மன்னர்கள் எல்லாவிடத்தும், சென்று அவ்வவ்விடத்துப் பொருள்களை அந்நாட்டில் கொண்டுவந்து சேர்ப்பார். இதனைக் கம்பநாடன்,

"கதிர்பபடு வயலின் உள்ள
கடிகமழ் வயலின் உள்ள
முதிர்பல மரத்தின் உள்ள
முதிரைகள் புறவின் உள்ள
பதிபடு கொடியின் உள்ள
படிவளர் குழியின் உள்ள
மதுவள மலரிற் கொள்ளும்
வண்டென மன்னர் கொள்வார்"[4]

[கதிர்-தானியக்கதிர்; கடி-மணம்; பலமரம்-பலா மரம்; புறவு-கொல்லை; முதிரை-பருப்பு வகை; பதி-பூமி; குழியின் உள்ளவை-மஞ்சள், இஞ்சி போன்றவை]

என்று விளக்குகின்றான்.

இங்ஙனம் மக்கள் வாழ்க்கைக்கு உயிர் நாடியாகவுள்ள மேழிச்செல்வத்தைப் போற்றும் வகையில் "ஏரெழுபது"

---

4. ஷை ஷை-21.

என்ற ஒரு சிறிய நூலை இயற்றியுள்ளான் கவிச்சக்கரவர்த்தியாகிய கம்பநாடன். "இந்த நூல் கம்பனுடையதா? அல்லது பிற்காலத்துப் புலவர் ஒருவர் இயற்றிக் கம்பன் இயற்றினதாக அவன் பெயரில் உலவ விட்டாரா?" என்ற ஆராய்ச்சியில் நாம் இப்பொழுது இறங்கவேண்டாம். அவன் மேழிச் செல்வத்தை எங்ஙனம் பாராட்டியுள்ளான் என்பதை மட்டிலும் ஈண்டுக் காண்போம்.

**உழவர்களின் சிறப்பு :** அழுங்குழவியை எடுத்தணைக்கும் தாய் போன்று தம்மிடம் எழுங்கருணையால் அனைத்துயிர்களையும் காக்கும் பண்புடையவர்கள் உழவர்கள்[5]. இவ்வுலகத்தைப் படைத்த நான்முகன் இவ்வுழவர்களைத்தான் உலக முதற்கருவாகப் படைத்தான். வேதியரின் உயர்குலமும் விறல்வேந்தர் பெருங்குலமும், நிதிவளம் மிக்க வணிகர் குலமும் தாயனைய உழவர் குலத்திற்கு ஈடாகாது என்பதைப் பன்னியுரைக்க வேண்டியதில்லை என்பது கவிஞனின் கருத்தாகும். உழவர்கள் ஏர்விழாக் கொண்டாலன்றி முடிசான்ற மன்னர்களும் போர்விழாவை மேற்கொள்ள முடியாது. காரணம், அவர்களது செங்கோலை நடத்தும் கோலும் உழவர்களின் ஏர் அடிக்கும் சிறு கோலன்றோ? இதுகருதியே வள்ளுவப் பெருந்தகையும் 'உழவர் உலகத்திற்கு ஆணி'[6] என்று கூறிப் போந்தார். மேலும் வள்ளுவர் கருத்தினைத் தழுவியே கம்பநாடனும்,

"உழுதுண்டு வாழ்வாரே
வாழ்வார்மற் றெல்லாரும்
தொழுதுண்டு பின்செல்வார்
என்றேஇத் தொல்லுலகில்
எழுதுண்ட மறையன்றோ?"[7]

---

5. ஏரெழுபது-பாயிரம்-9.
6. குறள்-1032
7. ஏரெழுபது, 9; குறள் 1033

என்று உழுநரின் சிறப்பினை வலியுறுத்துகின்றான். பிறிதோரிடத்தில் உழவர்களைத் தவிர உலகினை ஊட்டுவார் பிறர் உளரோ என்றும், "பகடு, பூட்டுவார் புகழன்றிப் பிறர்புகழும் புகழாமோ?" என்றும் சிறப்பித்துப் பேசுகின்றான். இதனையே கவிஞன் மற்றோரிடத்தில் "ஏராணிப் ......பெருக்காளர்"[8] என்று சிறப்பிப்பான். மேலும்,

"வேதநூல் முதலாகி
விளங்குகின்ற கலையனைத்தும்
ஓதுவார் எல்லாரும்
உழுவார்தம் தலைக்கடைக்கே"[9]

என்று முத்தாய்ப்பு வைக்கின்றான் கவிஞன்.

**உழவுத் தொழிலின் சிறப்பு :** உழவுத்தொழில் செவ்வனே நடைபெற்றால் குற்றமில்லாத நான்மறைகள் சிறப்பாகப் பொலிவுறும்; அந்தணர் இயற்றும் வேள்விகள் விளக்கமுறும்; கலைகள் யாவும் கிளைத்துச் செழிக்கும்; புலவர்கள் வாயில் நாமகள் தாண்டவமாடுவாள்; நாட்டில் இலக்குமியின் கருணை சிறந்தோங்கும்; மழையின் இன்றியமையாமையும் பயன் உறும். அரச நீதியும் சிறந்து விளங்கும். இதனைக் கவிஞன்,

"அலகிலா மறைவிளங்கும்;
அந்தணர் ஆகுதிவிளங்கும்;
பலகலையாந் தொகைவிளங்கும்;
பாவலர்தம் பாவிளங்கும்;
மலர்குலாந் திருவிளங்கும்;
மழைவிளங்கும்; மனுவிளங்கும்"[10]

என்று கூறுகின்றான். மேழியின் சிறப்பினைக் கம்பநாடன்,

8. ஷை 18
9. ஷை 11
10. ஷை 20.

"வாழிநான் மறையோர்கள்
வளர்க்கின்ற வேள்விகளும்
ஆழியால் உலகு அளிக்கும்
அடல்வேந்தர் பெருந்திருவும்
ஊழிபெறி னும்பெயரா
உரையுடைய பெருக்காளர்
மேழியால் விளைவதல்லால்
வேறொன்றால் விளையாவே"[11]

[பெருக்காளர்-வேளாளர், உழவா]

என்று பாராட்டுகின்றான்; உழவர்களின் ஏர் நடப்பதனால் தான் உலகில் எல்லாச் செயல்களும் நடைபெறும் என்றும், ஆனால் பசிமட்டிலும் "நடக்காது", என்றும் சமத்காரமாகப் பேசுகின்றான்.

"கார்நடக்கும்: படிநடக்கும்;
காராளர் தம்முடைய
ஏர்நடக்கும்; எ ணில்புகழ்சால்
இயல்இசைநா டகம்நடக்கும்;
சீர்நடக்கும்; திறம்நடக்கும்
திருவறத்தின் செயல்நடக்கும்;
பார்நடக்கும்; படைநடக்கும்;
பசிநடக்க மாட்டாதே"[12]

என்பது கவிஞனின் வாக்கு.

உழவு கருவிகளின் சிறப்பு: உழவுக்கருவிகளைச்சிறப்பிக்கும் கவிஞன் முதன் முதலாக ஏர்விழாவினைக்குறிப்பிடுகின்றான். உழவர்கள் ஏர்விழாவினை மேற்கொள்ளாவிடில் நான்கு விதபடைகளையுமுடைய பேரரசர்கள் போர்விழாவினை மேற்கொள்ள முடியாது. இதனைக் கவிஞன்.

---

11. ஏரெழுபது-4

12. ஷை-18

''ஏர்விழாக் கொளின் அன்றி
ஏறுழ்கரித்தேர் மாப்படையால்
போர்விழாக் கொளமாட்டார்
போர்வேந்தர் ஆனுரே''[13]

என்று புலப்படுத்துகின்றுன். வட எல்லையில் பகைவர்கள் ''போர் முஸ்தீப்பு'' செய்து வரும் நிலையில் போர்முனையை மேற்கொண்டிருக்கும் நம் குடியரசு முதலில் ஏர்முனையில் கவனம் செலுத்தி உணவுப் பிரச்சினைக்குத் தீர்வு காண வேண்டும். இதனை நன்கு உணர்ந்த கவிஞன்,

''குடையாளும் முடிவேந்தர்
கொலையானை தேர்புரவி
படையாளும் இவைநான்கும்
படைத்துடையர் ஆனுல்என்?
மடைவாளை வருபொன்னி
வளநாடர் தங்கள்கலப்
படைவாளைக் கொண்டன்றி
பகையறுக்க மாட்டாரே''[14]

என்று பேசுகின்றுன். உலகியலை உணர்த்தும் கவிஞன் கூறும் உண்மையை உள்ளுந்தோறும் உவகை பொங்குகின்றதன்றே?

இதனைத் தொடர்ந்து ஊற்றுணி, நுகத்தடி, நுகத்துளை, நுகத்தாணி, பூட்டாங் கயிறு, கொழு, கொழுவாணி, தாற்றுக்கோல், உழுவெருது. அதன் சுவற்கறை முதலியவற்றின் சிறப்புகள் பேசப்பெறுகின்றன. நீற்றோனும் மலரோனும் நெடியோனும் ஆகிய மூவரால் உலகம் நிலைபெறுவதற்கு உழவர்கள் உழுங்கலப்பையின் ஊற்றுணியே முதற்காரணம் என்று அதனைச் சிறப்பித்துப் பேசுவான் கவிஞன். வித்தினை ஏற்ற உழவர்கள் வெறுங்கையுடன்

13. ஷை-2

14. ஷை-3

போகாமல்அவர்களைக் கரையேற்றும் உழுநுகத்தின் காரண மாகவே செங்கதிரோன் ஒளிநெடுந்தேர் பூண்ட நுகம் இந்த இருள் தருமா உலகின் செறியிருள் நீக்கப் பெறு வதாகச் செப்புகின்றான். நுகத்தாணியைச் சிறப்பிக்கும் முகத்தான்.

"காரா ணிக் காவேரி
வளநாடார் உழுநுகத்தின்
சீராணிக் கொப்பதொரு
சிறந்தாணி செப்பீரே"[15]

என்று வினவுகின்றான். எருதுகளிரண்டையும் செழுநுகத் தோடு பூட்டும் பூட்டாங்கயிறே "புவிமகள் மங்கலக் கயிறாகும்" என்பது கவிஞனின் திடமான நம்பிக்கை. "கோதைவேல் மன்னர்தம் குடைவளமும் கொழுவளமே" என்று கொழு சிறப்பிக்கப்பெறுகின்றது. இந்த உலகின் நிலை வலியுடையதாயிருப்பதற்குப் பகைவர்களைத் தடுத்து நிற்கும் பனிவரை போன்ற எட்டு குலபர்வதங்கள் காரண மல்ல; திரைகொழிக்கும் ஏழுகடல்களும் அல்ல என்று தெரிவித்து.

"எடுத்தபுகழ்ப் பெருக்காளர்
எழுநுகத்தோ டிணைப்பகரு
தொடுத்ததொடை நெகிழாதேல்
உலகுதொடை நெகிழாதே"[16]

என்று தொடைச்சிறப்பினைப் பாராட்டுகின்றான். திங்கள் மும்மாரி பொழியினும், நிலமடந்தையின் கருணையால் ஊற்றுநீர் பெருகினாலும்,

15. ஷை-8
16. ஷை-16

"வழுவாத காவேரி
வளநாடர் உழுகலப்பைக்
கொழுவாணி கொண்டன்றிக்
குவலயஞ்சீர் நிரம்பாதே"[17]

என்று கொழுவாணியின் சிறப்பினைப் போற்றுகின்றான். நஞ்செய் வயலினுள் நெற்பயிரின் நாற்று முடி திருந்தினால் தான் பார்வேந்தரின் திருமுடி திருந்தும் என்பது கவிஞனின் கொள்கை. உண்மையும் அதுதானே?

"பொங்கோதைக் கடற்றானைப்
போர்வேந்தர் நடத்துபெருஞ்
செங்கோலை நடத்துங்கோல்
ஏரடிக்கும் சிறுகோலே"[18]

என்று தாற்றுக்கோலின் சிறப்பினைக் கூறும் முகத்தான் இதனை வலியுறுத்துகின்றான். வான மழை பொழிந்தாலும் நிலம் வளம்பெறுவதும், ஞான மறையவர் வேள்வி நலம் பெறுவதும், சேனையுடன் செருக்களத்தில் சென்று பொரும் மன்னவரின் யானை வலிபெறுவதும் உழவர்களுடைய எருதுகளின் வலியால்தான் என்று கூறுகின்றான். எருதுகளின் கழுத்தில் நுகத்தினால் ஏற்பட்ட கறையே மன்னவர்க்கு அமுதூட்டி வானவரையும் வாழ்விக்கும் என்பது கவிஞனின் கொள்கை. இதனைக் கவிஞன்,

"கண்ணுதலோன் தனதுதிருக்
கண்டத்தில் படிந்தகறை
விண்ணவரை அமுதூட்டி
விளங்குகின்ற கறைஎன்பர்!

---

17. ஏரெழுபது—12
18. ஷை —13

மண்ணவரை அமுதூட்டி
வானுலகாய் காப்பதுவும்
ஏண்ணருஞ்சீர் பெருக்காளர்
எருதுசுவல் இடுகறையே[19]

என்று நெற்றிக் கண்ணனின் திருநீலகண்டத்துடன் இணைத்துப் பேசுகின்றான். இதன்பிறகு பகடு பூட்டலின் சிறப்பு ஏர் நடத்தலின் சிறப்பு இவை பேசப்பெறுகின்றன.

உழுதல், பயிரிடல் சிறப்பு : உழவின் சிறப்பினை ஒருவர் சொல்லித் தெரியவேண்டியதில்லை. உண்டி சுருங்கினால் இது தானாகவே தட்டுப்படும். உழவின் சிறப்பினை இன்று நாம் நன்கு உணர்கின்றோம். உணவுப் பொருள் விற்கப் பெறும் கடையின் முன் "க்யூ" வரிசையில் நிற்பவர்களின் காட்சியும், உணவு விடுதிகளில் அளவு உணவு உண்பவர்களின் காட்சியும் இதனை நமக்கு எடுத்துக்காட்டுகின்றன. "உலகெலாம் ஒலி விளங்கும் உழவர் உழும் உழவாலே" என்று உழவின் சிறப்பினைத் தொகுத்துப் பேசிய கவிஞன் அதனை வகுத்தும் கூறுகின்றான். உழவர்களின் "உழுதசால் வழியன்றி உலகுவழி அறியாதே" என்று படைச்சாலின் சிறப்பினைப் பாராட்டுகிறான். உழவுத்தொழிலுக்கு உறுதுணையாக இருக்கும் மண்வெட்டி வேளாளர் கையில் இருக்கும் வரையில் இவ்வுலகிற்கு ஒரு நாளும் ஒரு குறையும் இல்லை. மெய்வரம்பும் வேதநூல் நெறிவரம்பும் இப்புவிக்கு வரம்பு அன்று என்று சமத்காரமாகக் கூறிய கவிஞன்,

"பொய்வரம்பு தவிர்த்தருளும்
புவிமடந்தை திருமைந்தர்
செய்வரம்பு திருத்தாரேல்
திசைவரம்பு திருந்தாதே" [20]

19. ஏரெழுபது—15
20. ஷை—23

என்று முடிக்கின்முன். இதன் பிறகு எருக்கூடையின் சிறப்புக் கூறப்பெறுகின்றது. நிலத்தின் வளமறிந்து அதனை மேலும் வளப்படுத்தும் பொருட்டு வேளாளர் சேறடிக் கின்றனர். பின்னர் பரம்படிக்கின்றனர். இதனுல் உடைந்து அளைந்த பழனச் சேற்று உரத்தைப் போல நிலத்தை வளப்படுத்தி மணி கொழிக்கும் உரம் வேமுென் றும் இல்லை. இத்தலைகய நிலத்தில் விளைந்திடும் வித்து நமக்கு வேண்டுவனவற்றையெல்லாம் விளைவிக்கும். இங்ஙனம் விளைத்த வித்தின் முளை மயங்காமல் செழிக்கு மாயின் திறல்வேந்தரின் நல்லாட்சி மயங்காது; வணிகர் களின் நேர்மை குன்முது; அந்தணர்களின் அருமறைகள் பொய்க்கா; மனு வகுத்த நீதியும் வழுவாது; இவ்வுலக நடைமுறையும் மயங்காமல் இயங்கும். "வேளாளர் விளைவயின், நாறுவிளைத்திடிலன்றி ஞாலமுயிர் வளராதே" என்று நாற்றங்கால் சிறப்பு காட்டப்பெறுகின்றது. வேளாளர் குறித்த நாளில் நாற்றைப் பறித்து நட்டு விட்டால் ஞாலத்தினருக்கு ஒருவித கவலையும் இல்லை. இச்செயல் பழுதின்றி நடைபெற்று விடின்,

"வெறுத்துமீன் சனிபுகில்என்?
வெள்ளுதெற்கே ஆயிடில்என்?" [21]

என்று வினவுகின்முன். இது,

மைம்மீன் புகையினும்
தூமம் தோன்றினும்
தென்றிசை மருங்கின்
வெள்ளி யோடினும்" [22]

என்னும் புறப்பாட்டடிகளை யொட்டி எழுந்ததாகும். பெருக்காளர் பேணிச் சுமக்கும் நாற்று முடிக்கு வேந்தர் அணியும் மாணிக்கம் முதலாய மணியழுத்திச் சமைத்த

21. ஏரெழுபது 30
22. புறம் 117

ஆணிப்பொன் அணிமுடியும் ஈடாகாது என்று வற்புறுத்திக் காட்டுகின்றான்; வேளாளர் நாற்றுமுடியைச் சுமவாரேல் அரசரின் செங்கோல் சரிவர நடைபெறாது என்று குறிப்பிடு கின்றான். இங்ஙனம் வேளாளர் சுமந்து செல்லும் நாற்று முடிகள் வயலில் சென்றடையும் சிறப்பு,

''தென்னன்முடி சேரன்முடி
தேங்குபொன்னனி நாடன்முடி
கனினன்முடி கடல்சூழ்ந்த
காசினியோர் தங்கள்முடி
இன்னமுடி யன்றியும்மற்(று)
எடுத்துரைத்த முடிகள்எலாம்
மன்னுமுடி வேளாளர்
வயலின்முடி கொண்டன்றோ?'' [23]

என்ற பாடலால் காட்டப்பெறுகின்றது. வேளாளர் இந்த முடிகளைப் பிரித்து தக்கவாறு நடாவிடில் அந்தணர் மறை ஓதுதலும், புலவர்கள் அருந்தமிழ் நூல்கட்கு விளக்கம் செய்வதும் நடைபெறா என்பது கவிஞனின் குறிப்பு. எனவே, உழவுத் தொழிலை யாவரும் அறிந்து அதனை மேற் கொள்ளல் வேண்டும்.

''மெய்ப்பாடு படக்கிடந்த
வேதநூல் கற்றால்என்?
பொய்ப்பாங்கு படப்பிறரைப்
புகழுநூல் கற்றால்என்?
செய்ப்பாங்கு படக்கிடந்த
செழுஞ்சாலி நன்றாற்றைக்
கைப்பாங்கு புகுந்துநடக்
கற்றாரே கற்றாரே'' [24]

என்று கவிஞனும் இதனை வற்புறுத்துகின்றான். இங்ஙனம்

---

23. ஏரெழுபது—32
24. ஷை—34

ஏராலே சேருக்கி எருவாலே நிலத்தை வளமாக்கி நீராலே பைங்கூழை நிலைப்பிக்கும் வேளாளரையன்றி அகலிடத்தில் பிறந்தோர் 'யாராலே பசி தீர்வர்?' என்று வினவுகின்றான். மீண்டும் மீண்டும் உழுது நிலத்தைப் புழுதியாக்கினால் நிலம் நன்கு வளப்பட்டு எல்லாப் பொருள்களும் நன்கு விளையும் என்றும், அதன் காரணமாக நான்மறைகள் சிறக்கும் என்றும், இயல் இசை நாடகத் தமிழ் பொலிவுறும் என்றும், குற்றமற்ற அறச்செயல்கள் நடைபெறும் என்றும், ஆட்சியும் சிறப்புறும் என்றும் கூறுவான்.

"தொடிப்புழுதி கஃசா
உணக்கின் பிடித்தெருவும்
வேண்டாது சாலப் படும்" [25]

என்றதிருக்குறளின் கருத்தினையொட்டி இஃது எழுந்ததாகக் கொள்ளலாம். மழைவளங் கரப்பினும் ஆற்று நீரின்றி வற்றிப் போயினும் ஏற்றத்தைக் கொண்டு கிணற்று நீரை இறைத்துப் பயிர்வார்த்தல் வேளாளர் கடனாகும் என்று வலியுறுத்துகின்றான். துலைநீரின் சிறப்பினை,

"கலையிட்ட மறைவேந்தர்
கனல்வேள்வி வளர்ப்பதுவும்
மலையிட்ட புயத்தரசர்
மணிமகுடம் சூட்டுவதும்
தலையிட்ட வணிகர்உயத்
தனமீட்டப் படுவதும்
நிலையிட்ட வேளாளர்
துலையிட்ட நீராலே" [26]

என்று புலப்படுத்துகின்றான். பார்தாங்கும் மன்னுயிரின் பசிதாங்கு பைங்கூழினுக்கு நீர்தாங்கும் வேளாரே நிலந்

25. குறள்—1037
26. ஏரெழுபது—40

தாங்குகின்றவர்களாகின்றனர் என்பதை வலியுறுத்தவும் வேண்டுமோ?

**பைங்கூழின் சிறப்பு:** அடுத்து பைங்கூழின் சிறப்பு பகரப் பெறுகின்றது. பச்சைப் பசேலெனப் பைங்கூழ் தழைத்துக் கோடுகொள்ள வேண்டுமாயின் அதனைச் சூழ்ந்து முளைக்கும் களைகளைக் களைதல் வேண்டும். செஞ்சாலி தழைத்துக் கருவடைந்தால் உலகமெலாம் உயர்ந்தோங் கும்; கலியும் நீங்கும். பைங்கூழ் வளர்ந்து பசுங்கதிர் விடுவ தற்கு வெங்கதிரோனும் தண்மதியும் துணைசெய்கின்றனர். இவர்களின் துணையால் காராளர் வளர்க்கும் கதிர் உயிர் களை வளர்க்கின்றது. இதனைக் கவிஞன்,

> "முதிராத பருவத்தும்
>     முற்றியநற் பருவத்தும்
> கதிராகி உயிர்வளர்ப்ப(து)
>     இவர்வளர்க்கும் கதிரன்றோ?" [27]

என்று கூறுகின்றான். இப்பசுங்கதிர் முற்றி நெற்குலையாக வளைதலின் சிறப்பினைக் கவிஞன் மிகச் சமத்காரமாகப் பேசு கின்றான். செஞ்சாலிக் குலை வளையுங்கால், புவிவேந்தர் அங்கையில் தங்கிய வீரச்சிலை வளைகின்றது; மாரனின் கரும்புச் சிலை வளைகின்றது; கொடுமையான கலியின் தலை யும் வளைகின்றது. ஆனால், அரசனின் செங்கோல் மட்டிலும் வளைவதில்லை.[28] அரிசூட்டின் சிறப்பினைக் கவிஞன்,

> "பீடுவரம் பிடைவயலிற்
>     பிறைவாளிற் கடிக்கின்ற
> சூடுவரம் பேறுதேற்
>     சுருதிவரம் பேறுதே" [29]

என்று பாராட்டுகின்றான்.

---

27. ஏரெழுபது—48
28. ஷை—49
29. ஷை—52

இங்ஙனம் விளைந்த நெற்கதிர் அறுவடை செய்யப் பெற்றுக் களத்திற்குக் கொண்டுவரப் பெறுகிறது. இக்களத்தில் வேளாளர் நெல் வடித்துக் குவித்துக் களம் பண்ணுவதால்தான் சீரான விறல் வேந்தர் செருவிளைத்துச் செல்லுகின்றனர் என்றும், மனுநீதி பிறழாது விளங்குகின்றது என்றும் குறிப்பிடுகின்றான் கவிஞன். களத்தில் வந்து குவியும் படு சூட்டின் கனத்தினால்தான் மணம் மிக்க மலர் வாளியையுடைய காமன் அடல் சூடுகின்றான்; கொடிகள் இலங்கும் கோபுரங்கள் பொன் கவசத்தைச் சூடுகின்றன; முடிசூடிய மன்னர்கள் யாவரும் மூவுலகும் மெச்சும் வண்ணம் புகழ்சூடிப் பொலிகின்றனர். செந்நெற் சூட்டினை மிதித்திடுங்கோல்தான் வெம்பகைவர்களின் முரண்கெடுத்து செந்நெறி தழுவிச் செங்கோல் செலுத்தும் கோலாகும்; இக்கோல்தான் கருங்கலியை வேருடன் அகற்றும் கோலாகும். போக்களத்தையும் ஏர்க்களத்தையும் புறத்துறைப் பாடல்களால் சிறப்பித்துப் பாடுதல் கவிமரபு. இத்தகைய பாடல்களைப் 'புறப்பொருள் வெண்பா மாலை' என்ற நூலிற் காணலாம். வெண்கொற்றக் கொடையினை மேற்கொண்ட மன்னர்கள் மதயானைகள்படப் பொருத களம்பாடுதலைவிட ஏரியின் வலியால் நெல்குவிக்கும் களம் பாடுதலே சிறந்தது என்பது கவிஞனின் கருத்தாகும். இதற்கு,

பார்வேந்தர் பெருஞ்செல்வம்
பழுதுபடாது ஒருநாளும்
ஏர்வேந்தர் பெருஞ்செல்வம்
அழிவுபடாது இருத்தலினால்
தேர்வேந்தர் போர்களத்துச்
சிலர்வெல்வர்; சிலர்தோற்பர்;
ஏர்வேந்தர் போர்க்களத்துள்
இரப்பவரும் தோலாரே''[30]

---

30. ஏரெழுபது—58

என்று கவிஞன் சமத்காரமாகக் கூறும் காரணம் சுவையுடையது; உண்மையும் ஒருங்கே கொண்டது. தேர்வேந்தரின் போர்க்களத்தில் தோல்வியும் வெற்றியும் கிட்டும்; ஏர்வேந்தரின் நெற்களத்தில் யாசிப்பவர்கள்கூட தோல்வியடையார் என்ற நயங்கண்டு மகிழத் தக்கது. உழவர் இணைப்பகடு கொண்டு நடத்திப் படுத்த போர் வையகத்தில் விளங்குவதால்தான் அரசர் இணைப்பகடு நடத்திப் படுத்த போரினைப் பயந்து பார் தாங்கி வாழ்கின்றனர்.

**நெற்குவியலின் சிறப்பு :** இங்ஙனம் வேளாளர் உழைப்பினால் விளைந்த நெல் நேற்களங்களில் குவிந்து கிடக்கின்றது. நெல் ஏராளமாக விளைந்து பொலிந்தால், நிலமகட்குப் பொலிவு உண்டாகும்; பொன் பொலிவு பெறும்; தங்கக் கட்டுப்பாடே தேவை இல்லை! நாடும் புகழால் பொலிவு பெறும்; செஞ்சொற்கவிதைகளும் சிறப்புடன் திகழும். நெற்குவித்தலின் சிறப்பைக் கவிஞன்,

> "தன்னிகரொன்று ஒவ்வாத
> தலம்வளர்க்கும் பெருக்காளர்
> மன்னுபெருங் களத்தினிடை
> மாருதத்தில் தூற்றியிடும்
> செங்நெல்லைப் பொலிவாலே
> செம்பொன்மலை எனக்குவித்தே
> அந்நெல்லின் பொலிவாலே
> அவனியுயிர் வளர்ப்பாரே"[31]
>
> [மாருதம்–காற்று]

என்று பாராட்டிப் புகழ்கின்றான். இந்த நெற்குவியலைச் சுற்றி உழவர் தலைவன் கையினில் சிறுகோல் கொண்டு உலா வருகின்றான். கவிஞன் இந்தச் சிறுகோலையும் சிறப்பிக்கின்றான். இக்கோல் சினந்து எழும் கலியைச்செறுக்கும்; நாட்டில் மனு நெறியை உண்டாக்கி வளர்க்கும். அரசர்

31. ஏரெழுபது—36

கட்குத் தேவைப்படுங்கால் எப்பொருளையும் கொடுத்து உலகினைப் போற்றிக் காக்கும். இந்த நெல்லின் ஒரு பகுதியே அடுத்த முறை நெல் விளைவதற்கு விரைக் கோட்டையாகின்றது. இந்த விரைக் கோட்டையின் அடிப்படையில்தான் வேந்தர் கட்டும் கோட்டைகள் அமைகின்றன. இதனைக் கவிஞன்,

வரைக்கோட்டுத் திணிப்புயத்து
வளர்பொன்னித் திருநாடர்
விரைக்கோட்டை கொண்டன்றோ
வேந்தர்இடும் கோட்டைகளே''[32]

என்று குறிப்பிடுகின்றான். இவ்வுலகில் அரியணையின் மீதிருக்கும் அரசர்பக்கல் சரியணை இருந்தும் பெறும்பேறு பேறு அன்று; உழவரிடம் பெறும் பேறே உண்மைப்பேறு ஆகும் என்று கூறுவான் கவிஞன்,

''அறியா தனத்தின் மேலிருந்தே
அம் பொற் குடைக்கீழ் அரசியற்றும்
பெரியார் பக்கல் பெறும்பேறும்
பேறே அல்ல; பெருக்காளர்
சொரியா நிற்பச் சிலர்முகந்து
தூற்ரு நிற்கச் சிலர்அளந்து
புரியா நிற்பப் பெறும்பேறுக்(கு)
அதுநே ரொக்கப் போதாதே''[33]

என்று பாராட்டிப் புகழ்கின்றான். இதனையே வள்ளுவர் பெருமான் இன்னொரு வகையில் ''சுழன்றும் ஏர்ப்பின்னது உலகம்''[34] என்று குறிப்பிடுவர். நாமும் இந்நிலையில் ''மேழிச் செல்வம் வாழ்க! அது கோழைபடாத செல்வமாக என்றும் விளங்குக'' என்று வாழ்த்துவோமாக. தேசியகவி பாரதியுடன் சேர்ந்து,

---

32. ஏரெழுபது—66
33. ஷை —68
34. குறள்—1031

''உழவுக்கும் தொழிலுக்கும்
வந்தனை செய்வோம்—வீணில்
உண்டுகளித் திருப்போரை
நிந்தனை செய்வோம்''[85]

*என்று பள்ளு பாடிப் பாராட்டுவோமாக.*

---

85. பாரதியார் கவிதைகள் : சுதந்திரப்பள்ளு-4

# 11. கம்பனில் உருக்காட்சிகள்*

"உருக்காட்சி (Imagery) என்பது சொற்களினால் கவிஞன் புலன்கட்குக் கவர்ச்சியுடையதாகச் செய்யும் ஒரு வகை உத்தியாகும். புலன்களின் மூலம் படிப்போரின் எழுச்சிகளையும் அறிவினையும் விரைவாகக் கிளர்ந்தெழச் செய்தல் இயலும்; இதனைக் கருதியே கவிதையில் உருக் காட்சி கையாளப்பெறுகின்றது"[1] என்று கூறுவர் பர்ட்டன் என்ற ஆங்கிலத் திறனாய்வாளர் 'கவிதைத் திறனாய்வு' என்ற தமது நூலில். மேலும் அவர் கூறுவார். "புலன்கட்கு முறையீடு செய்வதற்கேற்ப உருக்காட்சிகள் வகை செய்யப் பெறுகின்றன; செவிப் புல உருக்காட்சிகள், கட்புல உருக் காட்சிகள் சுவைப் புலஉருக் காட்சிகள், நாற்றப்புல உருக் காட்சிகள், நொப்புல உருக் காட்சிகள் அல்லது தொடுபுல உருக் காட்சிகள், இயக்கப்புல உருக்காட்சிகள் (Kinesthetic image) மரவு வழி உருக்காட்சிகள் (Conventional

---

* கம்பன் மணிமலர்-80 (காரைக்குடிக் கம்பன் கழகம்)இல் வெளி வந்தது.

1. Burton S, N: *The Criticism of Poetry* Longmans Green Co Ltd., London).

Images) என்பவை அவை யாகும்'' என்று. எண்ணத்திற்கும் புலன் காட்சிகட்கும் குறியீடுகளாக இருப்பவை சொற் களாகும் என்பதை நாம் அறிவோம். ஒரு கவிதையைப் படிக்கும்போது அக்கவிதையிலுள்ள சொற்கள் அல்லது சொற்கோவைகள் சில பல உருக் காட்சிகளை நம் மனக் கண் முன் கொண்டு வந்து நிறுத்துகின்றன. புலன்களின் மட்டத்தில் தூண்டல்கள் (Stimuti) செய்வதைப் போலவே உருக்காட்சிகளும் கருத்து நிலைச் செயலில் (Ideatioally) நம் புலன்களைத் தூண்டி நம்மிடம் கவிதையநுபவத்தை எழுப்பிக் கவிதையைத் துய்த்து மகிழ்வதற்குத் துணை யாக அமைகின்றன. மேலும் சில சொற்கள் நம்மிடம் 'கட்டுண்ட' உருக்காட்சிகளையும் ('Tied' images) 'விடுதலை' உருக்காட்சிகளையும் (free images) எழுப்பி விடுகின்றன; இவையும் கவிதையைப் நுகர்வதற்கு இன்றியமையாத கூறுகளாக (Sin quo non) அமைகின்றன.

கம்பராமாயணத்தில் கம்பன் இத்தகைய எண்ணற்ற உருக்காட்சிகளை ஒன்றும் பலவுமாகத் தம்மொடு தாமாகக் கலக்கச் செய்து கவிதைகட்கு மெருகேற்றியுள்ளான்; வேண்டுமென்றே செயற்கை முறையால் அவன் இவ்வாறு செய்வதில்லை. அகாரதியிலுள்ள (நிகண்டிலுள்ள) சொற் களையெல்லாம் மனப்பாடம் செய்துகொண்டு கம்பன் தன் கவிதையில் கையாள்கின்றான் என்று கருதுதல் தவறு. அவை தாமாகவே வந்து 'க்யூ' வரிசையில் நின்று ஏவல் கேட்டு நிற்கின்றன. இடத்திற்கேற்ப, செய்யுளின் நடைக் கேற்ப, எழுப்ப நினைக்கும் உணர்ச்சிக்கேற்ப, பெற வைக்கும் சுவைக்கேற்பச் சொற்களை யாதொரு தட்டுத் தடையுமின்றி விரைந்து வந்து உதவும் நிலையைக் கவிதை யின் சொல்வளம் (poetic diction) என்று குறிப்பர். இந்தச் சொல்வளத்தின் செழுமைக்கேற்ப பல்வேறு உருக் காட்சிகள் படிப்போர் மனத்தில் கருத்து நிலையில் எழும். எடுத்துக் காட்டாக 'காதலித்த உருவாகி அறம் வளர்க்கும் கண்ணுளன், (இராவண வதை-202) 'சிரித்த பங்கயம்'

(கைகேயி சூழ்வினை-50) 'நினைந்த போதிலும் அமிழ் தொக்கும் நேரிழை' (சித்திர கூட-24), 'அல்லை யாண் டமைந்த மேனி அழகன், (குகப்-42), 'கன்று பிரிகாராவின் துயருடைய கொடி' (ஷை-66,) 'கொல்லாழி நீத்தாங்கோர் குனிவயிரச் சிலை தடக்கை கொண்ட கொண்டல்' (மிதிலைக்-154) 'கரும்பையும் சுவை கைப்பித்த சொல்லியர் (ஊர்தேடு-197) 'விரிந்த போர் அரக்கரென்னும், கான்சுட முளைத்த கற்பின் கனலி' (சூர்ப்பண-58) என்பன போன்ற சொற்கோவை எழுப்பும் உருக்காட்சிகளை எண்ணி மகிழ்க. இனி, சிறப்பாக ஒவ்வொரு புலனையும் பொதுவாக பல புலன்களையும் வரும் உருக்காட்சிகளைக் கண்டு மகிழ்வோம்.

**கட்புல உருக்காட்சிகள் :** பல்வேறு வகை உருக்காட்சி களிடையேயும் கட்புலத்தைக் கவரும் உருக்காட்சிகளே அதிகமாகவுள்ளன. இவையே படிப்போர் மனத்தில் நிலையான பதிவினை விளைவிக்கின்றன. கட்புல நரம்பு ஏனைய புல நரம்புகளைவிடத் தடித்திருப்பதே இதற்குக் காரணம் எனக் கருதலாம். இதன் காரணமாக இக்காலக் கல்வியில் கட்புல-செவிப்புலத் துணைக் கருவிகள் (Audio visual aids) அதிகமாகப் பயன்படுத்தப்பெறுகின்றன. கட் புலனைக் கவரும் ஒரு சில உருக்காட்சிகளை ஈண்டுக் காண்போம்.

**கண்டனன் என்ப மன்னோ**
**கதிரவன் சிறுவன் காமர்**
**துண்டலம் துறந்த கோல**
**வதனமும் குளிர்க்கும் கண்ணும்**
**புண்டரி கங்கள் பூத்துப்**
**புயல்தழீஇப் பொலிந்த திங்கள்**
**மண்டலம் உதயம் செய்த**
**மரகதக் கிரிய ஞனை**[2]

---

2. கிட்கிந்-மராமரப்-55

[கதிரவன் - சூரியன்; காமர் - அழகிய; வதனம் - முகம்; புண்டரிகம் - தாமரை; கிரி-மலை]

இப்பாடல் சுக்கிரீவன் இராமனைக் கண்ட காட்சியைக் கூறுவது. இதில் குண்டலம் துறந்த கோலவதனம், புண்டரீகங்கள்...மரகதக் கிரியனை என்பன கட்புலத்திற்கு முறையீடு செய்யும் உருக்காட்சிகள்; குளிர்க்கும் கண்ணொப்புலனை அடிப்படையாகக் கொண்ட கட்புல உருக்காட்சி. கலவை உருக் காட்சி இங்குக் கற்பனை நயத்துடன் திகழ்கின்றது.

கருமுகில் தாமரைக்
காடு பூத்துநீ(டு)
இருசுடர் இருபுறத்(து)
ஏந்தி ஏந்(து) அலாத்
திருவொடும் பொலியவோர்
செம்பொன் குன்றின்மேல்
வருவபோற் கலுழன் மேல்
வந்து தோன்றினன்[3]

[கலுழன் - கருடன்]

நான்முகனுக்கும் சிவனுக்கும் திருமால் காட்சி தருவதைக் காட்டும் பாடல் இது. இதில் கருமுகில், தாமரைக்காடு பூத்தல், இருசுடர், செம்பொன், குன்று, கருடன் மேல் வந்து தோன்றுதல் கட்புலத்தைக் கவரும் காட்சிகளாகும்.

பெரியநாள் ஒளிகொள் நாறு
விதமணிப் பித்திப் பத்தி
சொரியுமா நிழல்கள் ஆங்குச்
சுற்றலாய் காலின் தோன்றல்

3. பால. திருவவ-12

கரியனாய் வெளியன் ஆகிச்
செய்யனாய்க் காட்டும் காண்டற்(கு)
அரியனும் எளியன் ஆய்த்தன்
அகத்துறை அழக னேபோல்[4]

[நாள் - நட்சத்திரம்; பித்திபத்தி - சுவர்களின் வரிசைகள்; காலின்தோன்றல் - வாயு மகன்; அழகன் - திருமால்]

அநுமன் இலங்கையில் சீதையைத் தேடிச் சென்ற போது மாடங்களின் சுவர்களில் பதிப்பிக்கப் பெற்ற நவமணிகளின் ஒளியினால் பல்வேறு நிறங்களில் அவன் திருமேனி தோன்றுவதைக் காட்டும் பாடல் இது கரியனாய், வெளியனாய், செய்யனாய், அகத்துறை அழகன் இவை கட்புலத்தைக் கவரும் உருக்காட்சிகளாகும்.

வற்கலையின் உடையானை
மாசடைந்த மெய்யானை
நற்கலையின் மதியென்ன
நகையிழந்த முகத்தானைக்
கற்கனியக் கனிகின்ற
துயரானைக் கண்ணுற்றான்
விற்கையினின்று இடைவீழ
விம்முற்று நின்றொழிந்தான்[5]

[வற்கலை - மரவுரி; மாசு - புழுதி; விம்முற்று - செயலாற்று]

இப்பாடல் இராமனை மீட்டுச் செல்ல வந்த பரதனைக் குகன்காணும் நிலையைக்கூறுவது. வற்கலையின் உடையான், மாசடைந்த மெய்யான், நகை இழந்த முகத்தான்,

4. சுந்தர. ஊர்தேடு-102
5. அயோ. குகப்-29

கற்கனியக் கனிகின்ற துயரான் ஆகிய இவை கனிகின்ற துயரான ஆகிய இவை கண்ணிற்குக் காணப் பெறும் உருக்காட்சிகள்; வில் கையினின்று வீழல் இயக்கநிலை உருக்காட்சியாகும். இக்கலவை உருக்காட்சி கண்ணுக்குக் களிப்பினை நல்குவதாக அமைகின்றது.

கண்ணுற்ருன் வாலி நீலக்
கார்முகில் கமலம் பூத்து
மண்ணுற்று வரிவில் ஏந்தி
வடுவதே போலும் மாலை[6]

என்பது அம்பு பாய்ந்த நிலையில் வாலி தன்முன் வரும் இராமபிரானைக் காண்பதைத் தெரிவிப்பது. இதில் கமலம் பூத்த நீலக் கார்முகில், வரிவில் ஏந்தி மண்ணிற்கு வருதல் இவை இரண்டும் கட்புல உருக்காட்சிகளாகும்.

வெய்யோன்ஒளி தன்மேனியின்
விரிசோதியின் மறையப்
பொய்யோவெனும் இடையாளொடும்
இளையா னெடும் போனுன்
மையோமர கதமோ மறி
கடலோமழை முகிலோ
ஐயோஇவன் வடிவென்பதோர்
அழியாஅழ குடையான்[7]

கானாளப் புக்க இராமன் தன் இளவலோடும் சீதாப்பிராட்டியோடும் செல்லுவதைக் காட்டுவது இப் பாடல். வெய்யோன் ஒளி, தன் மேனியின் விரிசோதி, பொய்யோ எனும் இடை, மை, மரகதம், மறிகடல், மழை முகில் - இவையெல்லாம் 'கட்புல உருக்காட்சிகள்; அழியா அழகுடையான்...போனுன் என்பது இயக்கப்புல உருக்காட்சியாகும்.

6. கிட்கிந். வாலிவதை-75
7. அயோத். கங்கை-1

மாகந்தமும் மகரந்தமும்
அளகம்தரு மதியின்
பாகம்தரு நுதாளொடு
பவளந்தரும் இதழான்
மேகந்தனி வருகின்றது
மின்ஞேடென முளிர்பூ
நாகந்தனி வருகின்றது
பிடியோடென நடவா[8]

[மாகந்தம் - மிக்க நறுமணம்; மகரந்தப் - பூந்துகள் அளகம்-கூந்தல்; மதியின் பாகம் - பாதி சந்திரன்; நாகம் - ஆண்யானை; பிடி பெண் யானை]

இதுவும் சீதையும் இராமனும் நடந்து செல்வதைக் காட்டும் பாடல். மதியின் பாகந்தரு நுதலாள், பவளந்தரு இதழான் இவை கட்புல உருக்காட்சிகள், மேகம்மின்னுடன் வருதல், நாகம் பிடியோடு நடத்தல் இவை கட்புலத்தை அடிப்படையாகக் கொண்ட இயக்கப் புல உருக்காட்சிகள் மாகந்தமும் மகரந்தமும் அளகம் தருதல் நாற்றப்புல உருக்காட்சியாகும். இக்கலவை உருக் காட்சி சிந்தைக்கும் சிந்தனைக்கும் விருந்தாக அமைகின்றது. கம்பனின் இத் தகைய உருக்காட்சிகள் எண்ணற்றவை.

செவிப்புல உருக்காட்சிகள் : இத்தகைய உருக்காட்சி கள் கம்பனிடம் அதிகமாகவே காணப் பெறுகின்றன.

குரைத்த தேரும் களிறும் குதிரையும்
நிரைத்த வார்முர சும்நிமிர்ந் தெங்கணும்
இரைத்த பேரொலி[9]

என்ற பாடல் திருமண வோலை தரப் பெற்றுச் செய்தி யுணர்ந்த தசரதன் தன் பரிவாரங்களோடு மிதிலை

8. ஷை-4
9. பால. எழுச்சி-45

நகருக்கு எழுந்த நிலையைக் காட்டும் பாடல்களில் ஒன்று. இதில் தேர் செல்லல், களிறு செல்லல், குதிரை செல்லல், வரிசையாக முரசங்கள் அடிக்கப்பெறுதல் ஆகிய இவை கட்புல உருக்காட்சிகளை அடிப்படையாகக் கொண்ட செவிப்புல உருக்காட்சிகளாகும்.

மண்ணும் முழவின் ஒலிமங்கையர்
பாடல் ஓதை
பண்ணும் நரம்பிற் பயிலாவிசைப்
பாணி யோதை
கண்ணும் உடைவே இசைகண்ணுளர்
ஆடல் தோறும்
விண்ணும் மருளும் படிவிம்மி
எழுந்த(து) அன்றே.[10]

[முழவு-மத்தளம்; ஓதை-ஓசை; பாணி-கை; கண்-கணுக்கள்; வேய்-புல்லாங்குழல்; மருள் தல்-திகைப்படைதல்; விம்மி-மிகுதியாக]

தசரதனின் சேனை சந்திரசைலம் என்னும் மலையைக் கண்டதாகக் கூறும் பகுதியில் வரும் ஒரு பாடல் இது. முழவின் ஒலி, மங்கையர் பாடும் ஒலி, நரம்பின் பயிலா இசை, பாணி (தாள) ஒலி, வேயின் இசை ஆகியவை செவிப்புல உருக்காட்சிகள்; கண்ணுளர் ஆடல் இயக்கப் புல உருக்காட்சியாகும். கலவை உருக்காட்சி கண்ணிற்கும் காதிற்கும் விருந்தாக அமைகின்றது.

வார்முகம் கெழுவுகொங்
கையர்கருங் குழலின்வண்(டு)
ஏர்முழங் கரவமேழ்
இசைமுழங் கரவமே;

10. பால. வரைக்-74

தேர்முழங்கு அரவம்வெண்
திரைமுடங் கரவமே;
கார்முழங் கரவம்வெம்
கரிமுழக் கரவமே.[11]

[அரவம்-ஒலி; கார்-மேகம்; திரை-கடல்; கரி-யானை]

தசரதனைச் சனகன் எதிர்கொண்டழைத்தலைக் கூறும் பகுதியில் வரும் பாடல் இது. இதில் மகளிரின் கூந்தலில் வண்டுகள் செய்யும் ஒலி, ஏழிசை (பலவகை வாத்தியங்களின்) ஒலி, தேர்களின் ஒலி, கடல் ஒலி, முகில்கள் உண்டாக்கும் ஒலி, யானைகள் பிளிறும் ஒலி ஆகிய இவை செவிப்புல உருக்காட்சிகளாகும்.

கீதங்கள் இசைத்தனர் கின்னரர்;
கீதம் நின்ற
பேதங்கள் இயம்பினர் பேதையர்
ஆடல்; பின்னர்ப்
பூதங்கள் தொடர்ந்து புகழ்ந்தன;
பூசு ரேசர்
வேதங்கள் இயம்பினர்; தென்றல்
விருந்து செய்த[12]

[பேதங்கள்-இசை விகற்பம்; பூசுர ஈசர்-இருடிகள் பூதங்கள்-பலவகைப் பிராணிகள்]

இது சுரசையின் வயிற்றில் புகுந்து மீண்டு வந்த அநுமனது செயலைப் பலரும் பல வகையாகக் கொண்டாடுதலைத் தெரிவிக்கும் பாடல். கின்னரர் இசைத்த கீதங்கள், தேவ மாதர்களின் இசை விகற்பங்கள், பிராணிகளின் புகழ்ச்சி, இருடிகள் இயம்பும் வேத ஒலி இவை யாவும் செவிப்புல

11. பால. எதிர்கொள்-9

12. சுந்தர. கடல்தாவு-73

உருக்காட்சிகள்; தென்றலின் விருந்து நொப்புல உருக்காட்சியை அடிப்படையாகக் கொண்ட இயக்கப் புல உருக்காட்சியாகும்.

நொப்புல (தொடுபுல) உருக்காட்சிகள்: இந்த வகை உருக்காட்சிகளில் சிலவற்றைக் காண்போம்.

சுழலிடும் கூந்தலும்
துகிலும் சோர்தரத்
தழலிடு வல்லியே
போலச் சாம்பினாள்[13]

[துகில்-சேலை; தழல்-நெருப்பு; வல்லி-பூங்கொடி; சாம்புதல்-வாடுதல்]

இராமனைக் கண்ட பிறகு சீதை படும் விரக தாப நிலையைக் காட்டுவது இப்பாடல். நெருப்பில் போடப்பெற்ற பூங்கொடி வாடுதல் நொப்புல உருக்காட்சியாகும்.

அன்ன ளாகிய சானகி இவளென
அயிர்த்து அகத்தெழு வெங்தீத்,
துன்னும் ஆருயிர் உடலொடும் சுடுவதோர்
துயரு ழந்திவை சொன்னான்[14]

[அயிர்த்து - சங்கித்து; வெந்தீ - கோபாக்கினி; துயர்-துன்பம்; உழந்து-வருந்தி]

மண்டோதரியை மைதிலி என மயங்கிய மாருதியினது நிலையைக் கூறுவது இப்பாடல். சினத்தீ உடலைச் சுடுவது நொப்புல உருக்காட்சியாகும்.

நாற்றப்புல உருக்காட்சிகள் : இவையும் கவிதையை நுகர்வதற்குத் துணை செய்வனவாகும்.

13. பால. மிதிலை-43

14. சுந்தர. ஊர்தேடு-199

அலவு தண்துளி அருவிநீர்
அரம்பையர் ஆடக்
கலவை சாந்துசெங் குங்குமம்
கற்பகம் கொடுத்த
பலவும் தோய்தலில் பரிமளம்
கமழ்வன பாராய்.[15]

[அலவு-அசைகின்ற; அரம்பையர்-தேவ மகளிர்; பரிமளம்-வாசனை; கமழ்தல்-வீசுதல்]

இஃது இராமன் சீதைக்குக் காட்டும் சித்திர கூடக் காட்சிகளில் ஒன்றினைத் தெரிவிக்கும் பாடல். அருவி நீரில் கலந்து வரும் பல நறுமணப் பொருள்கள் தரும் வாசனையைத் தெரிவித்தல் நாற்றப்புல உருக்காட்சியாகும்.

வானி ழுக்கும் ஏல வாச
மன்றல் நாறு குன்றமே.[16]

[இழுக்கு-கவடுகின்ற]

அநுமனுடன் இராம இலக்குமணர் வாலி இருக்கும் இடத்தை நாடி ஒரு மலைச்சாரலினை வழியாகச் செல்லுவதைக் கூறுவது இப்பாடல்; மலையின் தன்மையைப் பாடல் விளக்குகின்றது. ஏலவாச மன்றல் நாறு குன்றம் என்பதால் நாற்றப்புல உருக்காட்சி காட்டப்பெறுகின்றது.

சாந்த ளாவிய கலவைமேல்
தவழ்வுறு தண்டமிழ்ப் பசுந்தென்றல்.[17]

இஃது இராவணன் படுத்திருந்த நிலையை அநுமன் காண்டலைக் கூறுவது. இராவணன் மேனியின் மீது பூசப் பெற்ற சந்தனக் கலவை நாற்றப்புல உருக்காட்சியையும்

---

15. பால. சித்திர-25
16. கிட்கிக்-கலங்காண்-41
17. சுந்தர. ஊர்தேடு-210

தண்டமிழ்ப் பசுந்தென்றல் தவழ்வது ஊற்றுப்புல (நொப் புல) உருக்காட்சியையும் உணர்த்துகின்றன,

சுவைப்புல உருக்காட்சிகள் : இவையும் கம்பன் பாடல் கட்குச் சுவையூட்டுகின்றன.

'அறுசுவைத் தாய உண்டி
அரச! நின் அனிகத் தோடும்
பெறுக' என அளித்து வேந்தோ(டு)
யாவரும் துய்த்த பின்றை
நறுமலர்த் தாரும் வாசக்
கலவையும் நல்கலோடும்[18]

[அனிகம்-சேனை மக்கள்; தார்-மாலை; வாசக் கலவை-நறுமணமுள்ள கலவைச் சந்தனம்]

வசிட்டனின் காமதேனு விசுவாமித்திரனின் சேனைக்கு விருந்தூட்டினதைக் காட்டுவது இப்பாடல். அறுசுவைத் தாய உண்டி சுவைப்புல உருக்காட்சியையும், நறுமலர்த் தார் வாசக் கலவை நாற்றப்புல உருக்காட்சியையும் தெரிவிக்கின்றன.

வேற்கணார் குமுதச் செவ்வாய்
வாலெயிற்(று) ஊறும் தீந்தேன்
மாந்தினர் மயங்கு வாரை[19]

அநுமன் இலங்கையில் சீதையைத் தேடிச் சென்றபோது அரக்கியர் முதலிய பற்பலர் இருந்த நிலையைக் காட்டுவது இப்பாடல். வாலெயிறு ஊறு தீந்தேன் மாந்துதல் சுவைப் புல உருக்காட்சியை உணர்த்துவதாகும்.

சித்திர பத்தியில் தேவர் சென்றனர்
இத்துணைத் தாழ்ந்தனம் முனியும் என்றுதம்

---

18. பாலகா. மிதிலை-94
19. சுந்தர. ஊர்தேடு-112

முத்தின் ஆரங்களும் முடியின் மாலையும்
உத்தரீ யங்களும் சரிய ஓடுவார்.[20]

இயக்கப்புல உருக்காட்சிகள் : இந்நிலை உருக்காட்சிகளும் கவிதைச் சுவையை மிகுவிக்கக் காரணமாகின்றன.

[சித்திரப்பத்தி - சித்திரப்பாவையின் வரிசை; முனியும்-கோபிக்கும்; ஆரம்-மாலை; உத்தரீயம்-மேலாடை]

இராவணனுக்கு ஏவல் செய்யும் தேவர்கள் விரைவாகச் செல்லுவதைக் கூறும் பாடல் இது. சென்றனர், முத்தின் ஆரம் முடியின் மாலை உத்தரீயம் முதலியன சரிதல், ஓடுவார் ஆகியவை இயக்கப்புல உருக்காட்சிகளைக் காட்டுபவை.

'அறிவனும்தன்
புனைந்தசடை முடிதுளக்கிப்
போரேற்றின் முகம்பார்த்தான்.[21]

விசுவாமித்திரன் சிவதனுசை எடுக்குமாறு இராமனுக்குக் குறிப்பு தருவதை விளக்குவது இப்பாடல். முடி துளக்குதல் இயக்கப்புல உருக்காட்சியாகும்.

செழுமணிக் கொடிகள் என்னும்
கைகளை நீட்டி அந்தக்
கடிநகர் கமலச் செங்கண்
ஐயனை ஒல்லை வாவென்(று)
அழைப்பது போன்ற தம்மா.[22]

[செழுமணி - அழகிய; ஒல்லை – விரைவில்]

இராம இலக்குமணர்கள் விசுவாமிரனுடன் மிதிலை நகர் வருங்கால் அந்நகர் மதிலின்மீதுள்ள கொடிகள்

20. சுந்தர. ஊர்தேடு-51
21. பால. கார்முகம்-25
22. ஷை. மிதிலை-1

அசைவதைக் குறிப்பிடும் பாடல் இது. கொடிகள் அசைவது இயக்கப்புல உருக் காட்சியாகும்.

மரபு நிலை உருக்காட்சிகள்: மரபு வழியாக வரும் கருத்துகளைப் புலப்படுத்தும் நிலையிலமைந்தவை இவை. இவற்றாலும் பாட்டின்பம் மிகுகின்றது.

வயிரவான் பூணணி
    மடங்கல் மொய்ம்பினான்
உயிரெலாம் தன்னுயிர்
    ஒப்ப ஓம்பலால்
செயிரிலா உலகினில்
    சென்று நின்றுவாழ்
உயிரெலாம் உறைவதோர்
    உடம்பும் ஆயினான்,[23]

[வயிரம் - வச்சிரம்: மடங்கல் -சிங்கம்; மொய்ம்பு-வலிமை]

இப்பாடல் தசரதன் நாடுகாத்தலைக் கூறுவது. உயிரெலாம் உறையும் உடம்பு ஆதல் மரபு நிலை உருக் காட்சியாகும். சரயுநதியின் வெள்ளம் சென்று பரவி தோட்டம் தோறும் பாய்ந்தலை மூன்று மரபு நிலை உருக்காட்சிகளால் விளக்குகின்றான் கம்பன்.

செல்லுறு கதியிற் செல்லும்
    வினையெனச் சென்ற தன்றே[24]

இதில் நால்வகைக் கதியிலும் செல்லும் வினை என்பதில் மரபு நிலை உருக் காட்சி வந்துள்ளமையும் (வெள்ளம்) சென்றது என்பதால் இயக்கப் புலஉருக் காட்சியும் வந்துள்ளமை கண்டு மகிழத்தக்கது.

---

23. பால. அரசியல்-10
24. ஷை. ஆற்றுப்-17

எல்லையில் மறைக ளாலும்
இயம்பரும் பொருளீ தென்னத்
தொல்லையில் ஒன்றே யாகித்
துறைதொறும் பரந்த சூழச்சிப்
பல்பெரும் சமயம் சொல்லும்
பொருளும்போல் பரந்த தன்றே[25]

[எல்லை இல் - அளவிட முடியாத; தொல்லையில்- ஆதியில்; சூழ்ச்சி - ஆராய்ச்சி; பரந்தது - பரவி இருந்தது]

இது வெள்ளம் பரவுவதைக் கூறும் பாடல். பரம் பொருள் ஒன்றேயாயிருப்பது போல சரயு வெள்ளமும் ஒன்று; பல சமயத்தினர் பரம்பொருளைப் பலபடியாகச் சொல்லுகின்றனர். அங்ஙனமே வெள்ளம் ஏரி, தடாகம் முதலிய இடங்களில் பல பெயர்களைப் பெறுகின்றது. இதில் அமைந்துள்ள ‘பல் பெருஞ் சமயம் சொல்லும் பொருள்’ என்பதில் மரபு வழிபட்ட உருக்காட்சி அமைந்துள்ளது; (வெள்ளம்) புலர்ந்தது என்பதில் இயக்கப்புல உருக்காட்சியும் பொருந்தியுள்ளது.

தாதுகு சோலை தோறும்
சண்பகக் காடு தோறும்
போதவிழ் பொய்கை தோறும்
புதுமணத் தடங்கள் தோறும்
மாதவி வேலிப் பூக
வனந்தொறும் வயல்கள் தோறும்
ஓதிய உடம்பு தோறும்
உயிரென உலாவ தன்றே[26]

25. ஷை -19
26. ,, 20

[தாது உகு-மகரந்தம் சிந்தும்; போது-அரும்பு; மாதவி-குருக்கத்தி; பூகம்; வனம்-கமுகம் தோட்டம்]

சரயு வெள்ளம் பல இடங்களில் உலாவியுள்ளதைக் காட்டும் பாடல் இது. சோலைகள், காடுகள், போய்கைகள், தடாகங்கள்,கமுகம் தோட்டம்,வயல்கள்இவற்றில் வெள்ளம் உலாவியிருப்பது உடம்புகள் தோறும் உயிர் புகுந்திருப்பதை உணர்த்துகின்றது. உயிர் உடம்புகள் தோறும் புகுந்திருப்பது மரபு நிலை உருக்காட்சியாகும்; வெள்ளம் உலாவுதல் இயக்கப்புல உருக்காட்சியாகும்.

உருக்காட்சிகளின் கலவை: பெரும்பாலும் உருக்காட்சிகள் தனித்து வருதல் அருமை; அவை கலவையாகவே கவிதைகளில் அமைந்து அவற்றிற்கு மெருகூட்டுகின்றன.

தண்டலை மயில்கள் ஆடத்
தாமரை விளக்கம் தாங்கக்
கொண்டல்கள் முழலின் ஏங்கக்
குவளைகண் விழித்துநோக்கத்
தெண்திரை எழினி காட்டத்
தேம்பிழி மகர யாழின்
வண்டுகள் இனிது பாட
மருதம்வீற் றிருக்கு மாதோ'[27]

[கொண்டல்-மேகம்; முழவு-மத்தளம்; திரை-அலை; எழினி-திரைச்சீலை; தேம்பிழி-இனிய தேனையொத்த]

இது மருத நிலம் என்ற மன்னன் கொலுவீற்றிருக்கும் காட்சியைக் காட்டும் பாடலாகும். மயில்கள் ஆடுதல் இயக்கப்புல உருக்காட்சி; தாமரை விளக்கம் தாங்குதல்,

27. பால. நாட்டு-4.

குவளை கண் விழித்து நோக்குதல், தெண்திரை எழினி காட்டுதல் இவை கட்புல உருக்காட்சிகள்; கொண்டல் ஒலித்தல், வண்டுகள் இனிமையாகப் பாடுதல் இவை செவிப்புல உருக்காட்சிகள். இவை கலந்துநிற்கும் நிலையில் கவிதை அநுபவம் கொடுமுடியை எட்டிவிடுகின்றது.

கம்பனில் காணப்பெறும் உருக்காட்சிகளையெல்லாம் வேறுவிதமாகவும் தொகுத்து ஆராயலாம். இறைமையும் தத்துவமும் — இதில் பல்வேறு பொருள்கள்; வான் பொருள்கள்-கதிரவன் முதலிய பல; இயற்கை-மலை கடல் முதலியவை; பல்லுயிர்கள்-விலங்கு, பறவை முதலியவை; பொதுநிலை-அமுதம்-நஞ்சு, ஓவியம், ஊழ், கூற்றுவன், அடைமொழிகள், நுண்பொருள்கள், உலகியல் முறைகள்; இங்ஙனம் காண்டல் ஒரு பெரிய ஆய்வு நூலாக வடிவெடுக்கும். இவையெல்லாம் கவிதையநுபவத்தைப் பெருக்குவதற்குக் கவிஞன் கையாலும் உத்திகளாகும். இவற்றைஅமைப்பதில் கம்பனுக்கு நிகர் கம்பனேயாவான்.

---

பின்னிணைப்பு—1

# பயன்பட்ட நூல்கள்

## (அ) தமிழ் நூல்கள்


கம்பர் : **கம்ப ராமாயணம்** (வை. மு. கோபால கிருஷ்ணமாச்சாரியார் உரை), திருவல்லிக்கேணி, சென்னை-600005.

தண்டியார் : **தண்டியலங்காரம்** (கழக வெளியீடு)

திருவள்ளுவர் : **திருக்குறள்** (பரிமேலழகர் உரை)-கழக வெளியீடு.

பன்னிரு பாட்டியல் : (க. ரா. கோவிந்த ராச முதலியார் (விளக்க உரை)-கழக வெளியீடு.

பாரதியார் : **பாரதியார் கவிதைகள்** (எஸ். ஆர். சுப்பிரமணிய பிள்ளை, 6, பிலிப்ஸ் தெரு, சென்னை-600 001)


## (ஆ) ஆங்கில நூல்கள்


Burton, N : *The Grticism of Poetry* (Longmans & Green Co., Ltd, London)

Hudson, W. H : *An Introduction to the Study of Literature* (George G. Harrap & Co., Ltd.,) Sydney Toronto Bombay Stocholm.

## பேராசிரியர் டாக்டர்

# ந. சுப்புரெட்டியாரின் நூல்கள்

ஆசிரியம் :

1. தமிழ் பயிற்றும் முறை
2. கவிதை பயிற்றும் முறை
3. அறிவியல் பயிற்றும் முறை
4. கல்வி உளவியல்
5. யுனேஸ்கோ : அறிவியல் பயிற்றும் மூலமுதல் நூல்

இலக்கியம் :

6. கவிஞன் உள்ளம்
7. காலமும் கவிஞர்களும்
8. காதல் ஓவியங்கள்
9. அறிவுக்கு விருந்து
10. முத்தொள்ளாயிர விளக்கம் (பதிப்பு)
11. பரணிப் பொழிவுகள்
12. அறிவியல் தமிழ்
13. வேமனர்
14. சி. ஆர். ரெட்டி
15. திருக்குறள் கருத்தரங்கு மலர்-1974 (பதிப்பு)
16. கம்பனில் மக்கள் குரல்
17. காந்தியடிகள் நெஞ்சுவிடு தூது (பதிப்பு)
18. திருவேங்கடமும் தமிழ் இலக்கியமும்
19. மேகானி
20. குரஜாட

சமயம், தத்துவம் :

21. மலைநாட்டுத் திருப்பதிகள்
22. தொண்டை நாட்டுத் திருப்பதிகள்
23. பாண்டி நாட்டுத் திருப்பதிகள்
24. வடநாட்டுத் திருப்பதிகள்
25. சோழ நாட்டுத் திருப்பதிகள்—முதல் பகுதி
26. சோழ நாட்டுத் திருப்பதிகள்—இரண்டாம் பகுதி
27. முத்தி நெறி
28. சில நோக்கில் நாலாயிரம்
29. வைணவமும் தமிழும்

திறனாய்வு ;

30. கவிதையநுபவம்
31. தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை
32. கம்பன் படைத்த சிறு பாத்திரங்கள்
33. அகத்திணைக் கொள்கைகள்
34. புதுக்கவிதை போக்கும் நோக்கும்
35. கண்ணன் பாட்டுத்திறன்
36. பாஞ்சாலி சபதம் ஒருநோக்கு
37. பாரதீயம்
38. குயில்பாட்டு-ஒரு மதிப்பீடு

அறிவியல் :

39. மானிட உடல்
40. அணுவின் ஆக்கம்
41. இளைஞர் வானொலி
42. இளைஞர் தொலைக்காட்சி
43. அதிசய மின்னணு

44. நமது உடல்
45. இராக்கெட்டுகள்
46. அம்புலிப் பயணம்
47. தொலை உலகச் செலவு
48. அணுக்கரு பௌதிகம்
49. இல்லற நெறி
50. வாழையடி வாழை
51. அறிவியல் விருந்து
52. வானமண்டலக் காட்சி

ஆராய்ச்சி :

53. கலிங்கத்துப்பரணி ஆராய்ச்சி
54. *Religion and Philosophy of Nalayira Divya Prabandham with Special Reference to Nammalvar.*
55. *Studies in Arts and Sciences* (61 st Birth Day Commemoration Volume)
56. *Collected papers* of Prof. N. Subbu Reddiar

குறிப்பு : இவற்றைத் தவிர ஆங்கிலத்தில் ஐம்பதிற்கு மேற்பட்ட தமிழாய்வுக் கட்டுரைகளும், தமிழில் நாற்பதிற்கு மேற்பட்ட ஆய்வுக் கட்டுரைகளும் முந்நூறுக்கு மேற்பட்ட பொதுக் கட்டுரைகளும் எழுதியுள்ளமை; அன்றியும் முதல் ஐந்து வகுப்புகட்குப் பாடநூல்கள் எழுதினமை; 8முதல் 12 வகுப்புகட்குரிய உரைநடைப் பகுதிகட்குப் பல்வேறு துறைகளில் குறிப்பாக அறிவியல் துறைகளில் கட்டுரைகள் வழங்கினமை.

# பிழை—திருத்தம்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 31 | 9 | நேமுயும் | நேமியும் |
| 32 | 1 | திருமள் | திருமகள் |
| 52 | 18 | பாந்தன் | பாந்தள் |

பக்கம் 59, 61, 63—இங்குள்ள பக்கத் தலைப்புகளை 'அறிமுகம்' எனத் திருத்திக் கொள்க.

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 75 | 4 | தேவந்திரன் | தேவேந்திரன் |
| 11 | 8 | காட்டுன்கிறான் | காட்டுகின்றான் |
| 84 | 8 | நொயனுள் | நோயனுள் |
| 87 | 4 | மறந்தாள் | மறந்தான் |
| ,, | 7 | மறந்தாள் | மறந்தான் |
| ,, | 8 | மறந்தாள் | மறந்தான் |
| 89 | 26 | இருந்ததை | இருந்தை |
| ,, | 28 | நடுவன் | நடுவண் |
| 94 | 20 | கார்களாகத் | கண்களாகத் |
| 97 | 20 | மருங்குல்போய் | மருங்குல்போல் |
| 98 | 3 | நிற்கின்றான் | நிற்கின்றாள் |
| ,, | 5 | அமிந்துகொண் | அமிழ்துகொண் |
| ,, | 6 | டாங்கவேள் | டனங்கவேள் |
| ,, | 7 | யுண்டாதே | யுண்டதே |
| 100 | 8 | அமைத்தேன் | அமைத்தோன் |

First Paper: என்ன ஆச்சரியம்? "Enna Aacharyam !" [1949]




# ஓர் அறிமுகம்

பேராசிரியர்

# ந சுப்பு ரெட்டியார்




Books Published : **135 + 1**
Papers Published : **200** [Tamil 173 + English 27]
Endowments established: **10**
Endowment Lectures : **12**
Awards received: **8**
Prizes won : **14**
Titles conferred : **8**

## Masterpieces:

**1) Tamil Payitrum Murai [1957]**
**2) Religion & Philosophy of Naalayira Divyap-pirabhandham with special reference to Nammalwar [English][His PhD thesis ] [1977]**
**3) Kalvi Ulaviyal Kotpaadukal [1989]**
**4) Vainava Selvam [1995]**

## Financial Aid for publishing the Books:

a ) Tirumala Tirupathi Devasthanams - 21

b) Directorate of Tamil Development
Government of Tamil Nadu - 6

## Research on Professor's Books

a) University of Madras - 1993 (leading to PhD)
b) Madurai Kamaraj University - 2017 (leading to PhD)



பேராசிரியரின் 135 நூல்களில், தெரிவு செய்யப்பெற்ற 100 நூல்கள் (முழுமையாக)
**http://tinyurl.com/nsr100collections**
எனும் இணையதளத்தில் உள்ளன. [freely downloadable]




# India Book of Records

## CERTIFICATE

### CENTENARY CELEBRATIONS OF PROF DR. N SUBBU REDDIAR

**Prof Dr S Ramalingam (born on 13 Oct 1949) Organizing Secretary, Na Subbu Reddiar 100 Educational Trust, Chennai, Tamil Nadu, has conceived, designed and meticulously executed 108 Centenary Events throughout Tamil Nadu during the Centenary Year (2015-2016) of Prof. Dr. N Subbu Reddiar who served the cause of education for 65 years andwritten 135 books in various fields (100 books after retirement).**




**Biswaroop Roy Chowdhury**
Chief Editor
**India Book of Records**

**Date: March 19, 2018**

*India Book of Records is registered with the Government of India with RNI no. HARENG/2010/32259.*
*India Book of Records is affiliated to Asia Book of Records and follows Asian Protocol of Records (APRs) as per the consensus arrived at the meeting of the Chief Editors of National Record Books, Ho Chi Minh City, Vietnam.*


ISBN 978-81-939430-1-4
9 788193 943014



